## அய்யுஹல் வலத்

# அன்புள்ள மகனுக்கு!

**அரபு மூலம்:**
ஹுஜ்ஜத்துல் இஸ்லாம்,
**இமாம் கஸ்ஸாலி**
றஹ்மதுல்லாஹி அலைஹி

**தமிழில்:**
மௌலவி. பாஸில்.
**ஏ.எல். பதுறுத்தீன்**
காதிரி, ஷர்க்கி, பரேலவி.

வெளியீடு
**மஜ்லிஸ் முஹிப்புர் ரஸூல்,**
ஸூபிமன்ஸில்,
எண் : 194பி, 1-ஆவது தெரு, நேதாஜி நகர்,
சென்னை - 600 081

# நூல் பற்றிய விளக்கம்

| | | |
|---|---|---|
| மூல நூலின் பெயர் | : | **அய்யுஹல் வலத்**<br>**அன்புள்ள மகனுக்கு!** |
| மூல நூலாசிரியர் | : | **ஹுஜ்ஜத்துல் இஸ்லாம்**<br>**இமாம் கஸ்ஸாலி**<br>**றஹ்மதுள்ளாஹிஅலைஹி** |
| உரையாசிரியர் | : | மௌலவி **ஏ.எல். பதுறுத்தீன்.** காதிரி |
| உரிமை | : | உரையாசிரியருக்கு |
| பக்கங்கள் | : | 88 |
| பதிப்பு | : | **மஜ்லிஸ் முஹிப்புர் ரஸூல்,**<br>ஸூபிமன்ஸில்,<br>எண் : 194பி, 1-ஆவது தெரு,<br>நேதாஜி நகர், சென்னை - 600 081 |
| ஒளி அச்சு | : | **அன்றில் ஒளி அச்சு**<br>எசு.ஆர். கட்டட வளாகம்,<br>192/14, செகசீவன்ராம் சாலை,<br>பெல்சு சாலை, சேப்பாக்கம்,<br>சென்னை - 600 005.<br>பேசி : 044 - 28411525, 9952928293 |
| அச்சிட்டோர் | : | **சாய் பிரிண்டர்ஸ்,**<br>இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014.<br>பேசி : 98411 99999 |
| விலை | : | |

# சமர்ப்பணம்

இலங்கை கிழக்கு மாகாணம்
அம்பாறை மாவட்டம்
அட்டாளைச்சேனை என்னும்
எனதூரில் மறைந்து வாழும்
ஸூபி மகான்

**அல்ஆரிபுபில்லாஹ்,**
**ஆஷிக்கே இலாஹி,**
**அஷ்ஷைகுல் காமில்**
**அஷ்ஷாஹ் அஹ்மது மீரான்**
**ஸூபி, நூரி, காதிரி**
**நக்ஷபந்தி**

அவர்களுக்கு இந்நூலை
காணிக்கையாக்குகின்றேன்.

# உள்ளடக்கம்



## விசேட இணைப்பு:





# முன்னுரை

புகழ் அனைத்தும் றப்புல் ஆலமீனாகிய அல்லாஹ்வுக்கே சொந்தம்.! ஸலவாத்தும், ஸலாமும் றஹ்மதுன் லில் ஆலமீன், ஷபீஉல்முத்னிபீன்; செய்யிதுல்முர்சலீன் முஹம்மது முஸ்தபா சல்லல்லாஹுஅலைஹிவசல்லம் அவர்கள் மீதும், அன்னாரின் புனித குடும்பத்தினர்கள், சங்கையான நபித் தோழர்கள், இவர்களைப் பின்பற்றிய தாபியீன்கள், தப உத்தாபியீன்கள்; இமாம்கள்; காமிலான ஷைகுமார்கள் அனைவர் மீதும் உரித்தாகட்டும்!

“தஸவ்வுப்” என்பது மனதையும், செயலையும் பாவக் கறையிலிருந்து பரிசுத்தப்படுத்தி அறிவாலும், நற்செயல்களாலும் இவற்றை பிரகாசமாக்கும் “ரஸவாதத்தை”க் குறிக்கும். இதில் வெற்றி பெற்றவர்களை “ஸூபிகள்” என்றும், இறைநேசச்செல்வர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

**“நபியே! கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பதாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள்.. அல்லாஹ் உங்களை நேசிப்பான்.”**

மேலும் கூறுகின்றான்.

**“தனது இரட்சகனின் சந்திப்பை நாடுகின்றவர் நல்லமல்கள் செய்யட்டும்.”**

மேலும் கூறுகின்றான்.

**“ஈமான் கொண்டு நல்லமல்கள் செய்தவர்களுக்கு ஜன்னத்துல் பிர்தௌஸ் என்னும் சொர்க்கம் உண்டு.”**

மேற்கண்ட வசனத்தில், உயர் சொர்க்கத்தை அடைய ஈமானும், நல்லமலும் அவசியம்.

அல்லாஹ்வின் நேசத்தைப் பெறுவதற்கு, முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமவர்களை நேசித்து நல்லமல்கள் செய்ய வேண்டும்.

கடமையான பர்ளுகளை நிறைவேற்றுவதன் மூலம் சொர்க்கம் செல்ல முடியும்.

றஸூலுள்ளாஹி சல்லல்லாஹு அலைஹிவசல்லமவர்களை நேசித்து அன்னாரின் சுன்னத்துக்களை பேணி நடப்பவருக்கு சொர்க்கத்தைவிட உயர்ந்த அல்லாஹ்வின் திருப் பொருத்தமும், தரிசனமும் கிடைக்கும்.

ஸூபிகள் அல்லாஹ்வின் தரிசனத்தை தேடுபவர்கள். அல்லாஹ்வின் அன்பில் தன்னை மாய்த்தவர்கள். அதனால் பூமியில் ஸூபிகள் றஸூலுள்ளாஹி சல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் பிரதிநிதிகளாக விளங்குவார்கள். இவர்களின் வாக்கும், செயலும் நபிகள் கோமானை பிரதிபலிப்பதாக இருக்கும்.

இறைதரிசனம் என்ற வாழ்வின் வெற்றியை பெறுவதற்கான வழியை திருக்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

“ஈமான் கொண்டவர்களே! தக்வா செய்யுங்கள்! இன்னும் அவனளவில் செல்வதற்கான வஸீலாவை எடுத்துக் கொள்ளுங்கள். அவன் வழியில் போராடுங்கள் வெற்றி பெறலாம்.”

இத்திருவசனத்தில் வெற்றிபெறுவதற்கு நான்கு நிபந்தனைகள் கூறப்பட்டுள்ளன.

1. ஈமான், 2. தக்வா, 3. வஸீலா, 4. முஜாஹதா

இதில் ஈமான் என்பது, அறிவையும், தக்வா என்பது, கடமையான பர்ளுகளையும், சுன்னத்துக்களையும் உளத்தூய்மையோடும், இறையச்சத்தோடும், ஒழுக்கத்தோடும் செய்யப்படுகின்ற நற் செயலையும் குறிக்கும், வஸீலா என்பது, ஆத்மீக வழிகாட்டியையும், முஜாஹதா என்பது, மனதில் அலைபாயும் மனவெழுச்சிகளை திக்றின் மூலம் சமநிலைப்படுத்துவதையும் குறிக்கும். அதாவது, மனதிலிருந்து உலக மோகத்தை வேரோடு சாய்த்து அதன் உள்ளொளியை

பிரகாசிக்கச் செய்வதற்காக முயன்று போராடுவதைக்குறிக்கும். இத்தனையும் ஷைகின் வழிகாட்டுதலோடு செய்தால் வெற்றி கிட்டும்!

உங்கள் கையிலிருக்கும் இந்த நூல் மேற்கண்ட வெற்றியை அடைவதற்கான வழிகளைக் கூறுகின்றது.

ஒரு சாதகன் தனது யோகப்பாட்டையில் நடந்து கொள்ள வேண்டிய ஒழுக்க முறைகளையும், அவசியம் தவிர்க்க வேண்டியவை யையும் இந்த நூலில் இமாம வர்கள் சிறப்பாக விளக்குகின்றார்கள்.

இக்காலத்தில் ஷைகுகள் என்ற பெயரில் வருபவர்கள் பல ரகத்தில் இருக்கின்றனர்.

சிலர் பரம்பரை பேசி வருகின்றவர்கள்.

இவர்களுள் அறிவுள்ளவர்களும், அறிவற்றவர்களும் காணப்படுகின்றனர்.

இன்னுமொரு சாரார். தொடர்ச்சியான ஸில்ஸிலா இல்லாமல் எழுமானந்தமாக ஷைகாக அறிமுகமானவர்கள்.

வேறு சிலர் வழிதவறிய இயக்கங்கள் வழியில் வருபவர்கள்.

இவர்களில் எவரும் வழிகாட்டும் ஷைகாக இருக்கத் தகுதியற்றவர்களாகும்.

உண்மையில் வழிகாட்டத்தகுதியுள்ள **“ஷைகு”** என்பவர் யார்? அவரிடமிருக்க வேண்டிய தகுதிகள் யாவை? என்பன யாவும் இந்நூலில் விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

இந்நூல் அளவில் சிறிதாயினும் கருத்தில் அனைத்தையும் பொதிந்து நிற்கின்றது.

இறைவழி செல்ல ஆசைப்படுபவருக்கு இது நல்ல வழிகாட்டி யாகும். இதைப் படித்து அதன்படி ஒழுகி நடந்து வெற்றி பெற எனக்கும், வாசகர்களுக்கும் வல்லறஹ்மான் அவனது ஹபீபாகிய முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் பொருட்டினால் நஸீபாக்கி தந்தருள்வானாக! ஆமீன்

இந்த நூலில் விஷேஷ இணைப்பாக **"தஸவ்வுப் "** ஓர் அறிமுகம்! என்று ஒரு கட்டுரை இணைக்கப்பட்டுள்ளது. அதையும் படித்துப் பயன் பெறுமாறு வேண்டுகின்றேன்.

இந்த நூலை சிரமம் பாராது வெளியிட முன்வந்த சென்னை தண்டையார் பேட்டை நேதாஜி நகர் முதலாம் தெரு ஸூபிமன்ஸில் **"மஜ்லிஸ் முஹிப்புர் றஸூல்"** அமைப்பினருக்கு எனது ஆழ்ந்த நன்றிகளும் பிரார்த்தனைகளும் உரித்தாகுக!

எனதூரில் மறைந்து ஆட்சிபுரிகின்ற அஷ்ஷைகுல் காமில் அல்ஆரிபு பில்லாஹ் ஆஷிக்கே இலாஹி அஷ்ஷாஹ் அஹ்மது மீரான் ஸூபி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் பைழுகளையும், ஷபாஅத்தையும் ஆஷித்தவனாக இந்த நூலை அன்னாருக்குக் காணிக்கையாக்குகின்றேன்.

இறைவழி செல்லும் விருப்பமுள்ளவர்களுக்கு பயனுள்ளதாக இது இருக்கும் என்பது எனது நம்பிக்கை! இமாமவர்களின் இன்னும் பல பயனுள்ள நூற்களை தமிழில் கொண்டு வர முயன்று கொண்டிருக்கின்றோம். இன்ஷாஅல்லாஹ்!

இந்த நூலோடு இமாமவர்களின் **"பிதாயத்துல் ஹதாயா"** என்ற நூலின் தமிழாக்கமும் வெளிவருகின்றது என்பதையும் மகிழ்ச்சியோடு அறியத் தருகின்றேன்.

குறுகிய காலத்தில் ஒளியச்சு செய்து தந்த அன்றில் பதிப்பகத் தாருக்கும், அழகிய வடிவில் அச்சிட்டுத்தந்த சாயி பிரிண்டர்ஸ், இராயப்பேட்டை, சென்னை - 600 014. (பேசி : 98411 99999) அச்சகத்தாருக்கும் எமது நன்றிகள்.

வாசகர்கள் எமது முயற்சிக்கு ஆதரவு தருவார்கள் என்று நம்புகின்றேன். நன்றி.

சமுக ஊழியன்
**ஏ.எல். பதுறுத்தீன்.**
அட்டாளைச்சேனை, இலங்கை
0094 775886313

# 1. அன்புள்ள மகனுக்கு

*இமாம் நஸ்ஸாலி றஹ்மதுள்ளாஹி அவர்களின் ஒரு மாணவர் தனது ஐயங்களுக்கு விளக்கமும், நல்லுரையும் வழங்குமாறு இமாமவர்களுக்கு எழுதிய மடலுக்கு இமாமவர்களால் எழுதப்பட்ட பதில் **"அய்யுஹல்வலத்"** என்ற பெயரில் தனிச்சிறு நூலாக வெளி வந்துள்ளது . இதன் தமிழ் வடிவமே இத்தொடராகும்.*

**அன்புள்ள மகனே! அருமையான எனது நண்பனே அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு வணங்கிட நீண்ட ஆயுளை அல்லாஹுத்தஆலா உமக்கு நல்குவானாக! அல்லாஹ்வின் நேசர்களான வலிமார்களின் வழியில் செல்ல தௌபீக் செய்வானாக!**

நல்லுரைகள் அனைத்திற்கும் ஊற்றாகத் திகழ்பவர்கள் கண்மணி றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாகும் என்பதை முதலில் நீ புரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில், றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஹதீதையும், அன்னாரி சுன்னாவையும் தாங்கியே நல்லுரைகளுக்கான அனைத்து ஏடுகளும் அமைந்துள்ளன. ஹதீஸ், சுன்னாவுக்கு மாறான நல்லுரைகளினால் பயன் எதுவும் கிட்டப்போவதில்லை! றஸுலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் ஹதீஸ், சுன்னா அடிப்படையில்பயனுள்ள பல நல்லுபதேசங்களை எனது நூற்களில் எழுதியிருக்கின்றேன்.

இந்த நூற்கள் உமக்குக் கிடைத்திருந்தால், புதிய நல்லுரை களுக்கு அவசியமில்லை;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உபதேசங்களில் எதுவும் உமக்குக் கிடைக்காவிட்டால் இத்தனை ஆண்டுகளாக என்னிடம் தங்கியிருந்து எதைக் கற்றுத் தேறினீர்? என்பதை எனக்கு நீர் கூற வேண்டும்!

**மகனே! றஸூலுள்ளாஹி ஸல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் தங்களின் உம்மத்தினருக்காகக் கூறியுள்ள நல்லுபதேசங்களில் இதுவும் ஒன்று!**

**"ஓர் அடியான் தனக்குப் பயனில்லாத விஷயத்தில் ஈடுபடுவது அவனை விட்டும் அல்லாஹுத்தஆலா அவனது அருட்பார்வையைத் திருப்பி விட்டான் என்பதற்கான அடையாள மாகும்".** மனிதன் படைக்கப்பட்ட நோக்கத்திற்கு மாறானவையில் கவனம் செலுத்துவது கைசேதத்துக்குரியதாகும்.

மேலும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறினார்கள்;

**"ஒரு மனிதன் நாற்பது வயதைத் தாண்டியும் அவனது நடத்தையில் தீமையை விட நன்மை அதிகரிக்காவிட்டால் அவன் நரகம் செல்ல தயாராகி விட்டான்."**

**மகனே! உலக மாந்தர்களுக்கு நல்லுரை பகர்வது சுலபம் அதன்படி ஒழுகுவது தான் கடினம்! உலக இன்பமும், மன இச்சை களும் மனதில் நிறைந்துள்ள மக்களுக்கு நல்லுரை கூறி அவர்களை நல்வழிப்படுத்துவது கடினம்! அது அவர்களுக்குக் கசக்கவே செய்யும்.**

காரணம், அவர்களின் மனம் உலக சுகபோகத்தில் துவண்டு விட்டது. இதிலிருந்து அவர்களால் மீள முடியாது. உலக சுக போகத்தில் மனதைப்பறி கொடுத்தவர்களுள் தத்துவ அறிஞர் களும் உலகியல் கல்வி கற்றவர்களும் குறிப்பிடத்தக்கவர்களாகும்.

இக்கலைகளைக் கற்று அதன் படி ஒழுகாமலே சொர்க்கம் செல்ல முடியும் மறுமையில் வெற்றி பெறமுடியும் என்பது இவர்களின் நம்பிக்கை!

ஸுப்ஹானல்லாஹ்! ஒருவர் அறிவைக் கற்று அதன்படி செயல்படாவிட்டால், அவர் கற்ற கல்வி மறுமையில் அவருக்குக் கேடாகவே அமைந்து விடும் என்பதைக் கூட அறியாதவர்களாகத் தான் இவர்கள் இருக்கின்றார்கள்,

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லம் கூறினார்கள்,**

**"தான் கற்ற கல்வியில் அல்லாஹூத்த ஆலா பயன்கொடுக்காத அறிஞன்தான் மறுமையில் அதிக தண்டனைக் குரியவராவார்,"**

ஹளறத் ஜுனைதுல் பகுதாதி றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் வபாத்தான பின், அவர்களை ஒருவர் கனவில் கண்டு அபுல் காசிமே! நீங்கள் மரணித்த பின் உங்கள் நிலை எப்படி யாயிற்று? என்று கேட்டார். தான் இரவு பகல் செய்த வணக்கங்களும், ஆத்மீக அந்தரங்க சிலேடைகளும் வீணாகி விட்டன! நடுநிசியில் தொழுத தஹஜ்ஜுத் இரண்டு றக்காஅத்துக்கள் மட்டும் தான் தனக்குப் பயன் கொடுத்தது என்று பதில் கூறினார்கள்,

**மகனே! வெளிப்படையான (உலகியல்) அறிவைக்கற்று அதன் மூலம் நீ செய்கின்ற நல்லமல்களால் மறுமையில் வங்குரோத்து நிலைக்கு ஆளாகாதே! அமலின் பூரணத்துவத்தையும் இழந்து விடாதே! நல்லமல்கள் இல்லாத அறிவு மட்டும் மறுமையில் விமோசனத்தை ஈட்டித் தராது என்று உறுதியாக நம்பு!**

இதற்கு ஓர் உதாரணம் கூறுகின்றேன். கேள்! அடர்ந்த காட்டைக் கடந்து செல்லும் ஒருவரிடம் இந்திய உருக்குவாளும், கூரியபத்து ஈட்டிகளும், இருக்கின்றன, இவர் நன்கு பயிற்றப்பட்ட வீரர்! தீரர்கள் ஆவர்!

இந்நிலையில் காட்டிலிருந்து ஒரு சிங்கம் வெளியில் வந்து இவரின் முன் பாய்கின்றது. இவரிடமிருக்கும் ஆயுதத்தை இயக்காமல் சிங்கத்திடமிருந்து இவரால் தப்ப முடியுமா? சொல்லுங்கள் நிச்சயமாக முடியாது என்பது துளியும் உங்களுக்கு ஐயமில்லை!

இதிலிருந்து நீ கற்றுக் கொண்ட பாடம் என்ன? ஒருவர் ஓர் இலட்சம் சட்டப் பிரச்சினைகளுக்கான தீர்வுகளை பெற்றிருந்தும், அவற்றின்படி அவர் செயல்பட வில்லையானால், அவர் கற்ற கல்வியில் அவருக்கு எப்பயனும் ஏற்படப்போவதில்லை!

இன்னுமொரு உதாரணம் கூறுகின்றேன். நன்றாக கூர்ந்து கேள்!

ஒருவருக்கு ஏற்பட்டுள்ள நோய்க்கான காரணம் அளவுக்கு மிஞ்சிய உஷ்ணமும், பித்தமுமாகும், இதற்கு ஷக் ஜபீன் கஷ் காப் - என்ற இரு பானங்களிலும் நிவாரணம் உண்டு என்பது இவருக்குத் தெரியும்.

இதற்குரிய மருந்தைப் பருகாமல் அல்லது, பாவிக்காமல் இவரின் வருத்தம் சுகமாகுமா? தனக்கேற்பட்ட நோய்க்கான காரணம், உஷ்ணமும், பித்தமும் தான் என்ற அவரது அறிவு மட்டும் அவருக்கு பலன் கொடுக்குமா? ஒரு மருத்துவர் மருத்துவ அறிவைத் தெரிந்து கொள்வதால் மட்டும் ஒருக்காலும் நோய் தீரப் போவதில்லை.

**ஒரு கவிஞர் பாடினார்:**

**ஈராயிரம் றாத்தல் மதுவை நீ நிறுத்தாலும், குடிக்காமல் போதை உனக்கு வராது?**

நூறு ஆண்டுகள் கற்று ஆயிரம் நூற்களை நீ திரட்டி அதன்படி நீ செயல்படவில்லையாயின். அதனால் எப்பயனும் உமக்கு ஏற்படப்போவதில்லை.

அல்லாஹ்வின் பேரருளை நல்லமல்கள் மூலமாக நீ பெறும் வரை இறை பாக்கியத்தை உன்னால் அடையவே முடியாது.

**அல்லாஹு ்த்தஆலா கூறுகின்றான்:**

**மனிதன் தான் முயன்று செய்ததையன்றி வேறு எதையும் பெற்றுக் கொள்ள மாட்டான். (53:39)**

**மேலும் கூறுகின்றான்.**

**எவர் ஓர் அணுவளவு நன்மை செய்தாலும் அதன்பயனை அவர் கண்டு கொள்வார், எவர் ஓர் அணுவளவு தீமை செய்தாலும் அதன் பயனை (யும்) கண்டுகொள்வார். (99: 7, 8)**

**மேலும் கூறுகின்றான்.**

“எவர் தனது இரட்சகனைச் சந்திக்க ஆதரவு வைக்கின்றாரோ அவர் நற்காரியங்கள் செய்யட்டும்! (18 : 110)

**மேலும் கூறுகின்றான்”.**

(இவை) அவர் சம்பாதித்தற்கான நற்கூலியாகும். **(9:82)**

**மேலும் கூறுகின்றான்,**

நிச்சயமாக எவர் ஈமான் கொண்டு நல்லமல்கள் செய்கின் றார்களோ அவர்களுக்கு **“பிர்தௌஸ்”** என்னும் (உயர்) சொர்க்கங்கள் விருந்தினர் மாளிகையாக ஆகிவிட்டது. அதிலே சதாகாலமும் தங்கியிருப்பார்கள், **(18:107:108)**

**மேலும் கூறுகின்றான்.**

“எவர் தௌபாச் செய்து ஈமான் கொண்டு நல்லமல்கள் செய்தவர்களைத் தவிர, (25:70)

பின் வரும் நபிமொழியைப் பற்றி நீ என்ன நினைக்கின்றாய்”!

**இஸ்லாம் (என்ற கட்டிடம் ஐந்து தூண்களால் கட்டப்பட்டுள்ளது.**

1) **வணக்கத்திற்குத் தகுதியானவன், அல்லாஹ் அன்றி வேறு எவருமில்லை, என்றும், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அல்லாஹ்வின் திருத்தூதர் என்றும் சாட்சி பகர்தல்**
2) **தொழுகையை நிலை நிறுத்துவது. தொடர்ந்து தொழுவது)**
3) **(சொத்தில்) ஜக்காத் கொடுப்பது,**
4) **றமழான் மாதம் முழுவதும் நோன்பு நோற்பது.**
5) **பயணம் செய்வதற்கான சக்தி உள்ளவர்கள் ஹஜ் செய்வது,**

ஈமான் என்பது (நம்பிக்கை சார்ந்த விடயங்களை) வாயால் மொழிந்து மனதால் நிர்ணயம் கொண்டு உறுப்பினால் செயல்படுவதற்குக் கூறப்படும்,

நற்கிரிகைகள் அவசியம் செய்து தான் ஆக வேண்டும் என்பதற்கு கணக்கற்ற ஆதாரங்கள் நிறைந்து காணப்படுகின்றன. அல்லாஹ்வின் தனிப் பெரும் கொடையாலும், அவனுடைய கருணையாலும் தான் சொர்க்கம் செல்வர் என்பது முற்றிலும் உண்மை.

ஆனால், அல்லாஹ்வின் கருணையைப் பெறும் தகுதியை அமலினால் தான் அடைய முடியும், இத் தகுதி உள்ளவருக்குத்தான் அல்லாஹ்வின் பேரருளும், அவனது நற்கொடையும் கிட்டும், நற்கிரிகைகளினாலும், பணிவு, என்ற அடிமைத்தனத்தின் வெளிப்பாட்டினாலும் அல்லாஹ்வின் பேரருளைப் பெறும் தகுதியை இழந்தவர்களுக்கு அல்லாஹ்வின் பேரருள் (வேறு வழியால்) ஒரு போதும் கிடைக்கப் போவதில்லை.

**அல்லாஹு ٰத்தஆலா கூறுகின்றான்:**

நிச்சயமாக அல்லாஹ்வின் றஹ்மத் (மனத் தூய்மையுடன்) நற்காரியங்கள் புரிகின்றவர்களுக்கு நெருக்கமாக இருக்கும், அல்லாஹ்வின் றஹ்மத்தைப் பெற்றுக் கொள்ளாதவர் எப்படி சொர்க்கம் செல்வார்? ஓர் அடியான் ஈமான் மூலமாகத்தான் சொர்க்கம் செல்வார் என்பது உண்மைதான்!

எனது கருத்தும் அது தான்! மிக எழிதில் சொர்க்கம் செல்ல முடியாது! வழியில் படு மோசமான பல கணவாய்கள் இருக்கின்றன இவற்றைக் கடந்தே சொர்க்கம் செல்ல வேண்டும்!

கடைசி வரை ஈமானைப்பாதுகாப்பாக எடுத்துச் செல்வது தான் மிகப் பெரிய பயங்கரமான கணவாயாகும்.

ஈமானைப் பாதுகாப்பாக இறுதி வரை எடுத்துச் சென்றாலும் அமலில் கறையேற்பட்டு வங்குறோத்து நிலைக்கு அவர் ஆளாகமாட்டார் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கின்றது?

**ஹளறத் ஹஸனுல் பஸரி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்:**

**“எனது றஹ்மத்தினால், சொர்க்கம் செல்லுங்கள், நற்கிரிகை களுக்கு ஏற்றவாறு அதில் பங்கு பெறுங்கள்”** என்று மறுமையில் அடியார்களைப் பார்த்து அல்லாஹுத்த ஆலாகூறுவான்,

மகனே! முயற்சி செய்து அமல்கள் செய்யாமல் நற் கூலியைப் பெற முடியாது என்பதை நீ உறுதியாக நம்பு !

பனு இஸ்ரவேலர்களில் ஒருவர் அல்லாஹ்வை அதிகமாக வணங்கி வந்தார், அவரைச் சோதிப்பதற்காக அவரிடம் ஒரு மலக்கை அல்லாஹுத்த ஆலா அனுப்பி வைத்தான். வணக்க சாலியிடம் அவ்வானவர் வந்து ‘நீர் அதிகம் கஷ்டப்பட்டு அமல்கள் செய்கின்றீர்.

அப்படியிருந்தும் அல்லாஹுத்தஆலா உன் வணக்கத்தில் எதையும் ஏற்கவில்லையே! உமக்கு நரகமல்லவா தீர்மானிக்கப் பட்டுள்ளது என்று அல்லாஹுத் தஆலாலா கூறுகின்றான் என்றார். வானவரை ஏறிட்டுப் பார்த்த வணக்கசாலிஅல்லாஹுத்தஆலா அவனை வணங்கும் நோக்கில்தான் எம்மைப் படைத்தான். அதனால், அவனை வணங்வது தான் எமது கடமை! அல்லாஹுத்த ஆலா எமது எஜமான்! அனைத்துக்கும் உரிமையுள்ள எஜமான்! அவன் விரும்பியதைச் செய்யும் முழு உரிமை அவனுக்குண்டு என்று வணக்கசாலி கூறினார்.

வணக்கசாலி கூறிய பதிலை எடுத்துக் கொன்டு அல்லாஹ்வின் திருசன்னிதானம் சென்று, யா அல்லாஹ்! பிரபஞ்சங்களின் இரகசியத்தை நீ நன்கு அறிவாய்! என்றார் இந்த நல்லடியான் என்னை வணங்குவதை நிறுத்தாமலிருக்கும் வரை நாமும் அவன் பக்கம் விட்டும் நமது முகத்தைத் திருப்ப மாட்டோம் – மலக்குகளே! அந்த அடியானின் அனைத்து பாவங்களையும் மன்னித்து விட்டேன் என்பதற்கு நீங்கள் அனைவரும் சாட்சி என்று அல்லாஹுத்தஆலா கூறுவான்

**மகனே! றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறுவதைக் கவனித்துக்கேள்!**

**“மறுமையில் நீங்கள் விசாரிக்கப்பட முன் உங்கள் ஆத்மாவுக்கு நீங்களே சுயவிசாரணை செய்து கொள்ளுங்கள்!**

**உங்கள் அமல்கள் நிறுக்கப்பட முன் உங்கள் அமல்களை நீங்களே நிறுத்துக் கொள்ளுங்கள்”.**

**ஹளரத் அலி ரலியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.**

**“அமல்கள் செய்யாமல் சொர்க்கம் செல்ல முடியும் என்று நினைப்பவன் வழிகேடன்! தனது முயற்சியால் சொர்க்கம் செல்ல முடியும் என்று நினைப்பவன் காலத்தை வீணில் கழித்தவனாவான்.”**

**ஹளறத் ஹஸனுல் பஸறி றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.**

**“அமல்கள் செய்யாமல் சொர்க்கம் செல்ல முடியும் என்று முடிவு செய்வது பாவமாகும்.”**

ஒரு பெரியார் கூறுகின்றார்.

**“கற்றபடி செயல்படுவது தான் கற்ற கல்வியின் எதார்த்தமாகும்” அமலில் பெருமையைத் தவிர்க்க வேண்டும்! அதற்காக அமல்கள் செய்யாமலிருக்கக் கூடாது.”**

**றஸூலுள்ளாஹிஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறினார்கள்,**

**“மரணத்தின் பின் வரும் மறுமைக்காக மனதைக் கட்டுப்படுத்தி அமல்கள் செய்பவன்தான் உண்மையான புத்திசாலி ! பேராசைக்கும், இச்சைக்கும் மனதை வழிப்படச் செய்து கொண்டு அல்லாஹுத் தஆலா தன்னோடு இருப்பதாகவும் வாதிப்பவன் தான் மிகப் பெரிய முட்டாள் ஆவான்”.**

மகனே! படிப்பதற்கும். படித்ததை மீட்டிப் பார்ப்பதற்கும் மற்றும் நூற்களை வாசிப்பதற்கும் தூக்கத்தை இழந்து எத்தனை

இரவுகள் விழித்திருப்பாய்! இரவெல்லாம் கண் விழித்து நீ படித்ததின் நோக்கம் தான் என்ன! என்பது எனக்குத் தெரியாது. உயர் படிப்பின் மூலம் உலகியல் நன்மைகளைப் பெற வேண்டும். உயர் பட்டம் பெற்று உனது சமகால மக்கள் மத்தியில் உன் பதவியைக் காட்டி பெருமை பேசுவது உனது நோக்கமாயின், உனக்குக் கேட்டுக்கு மேல் கேடுதான்! அல்லது,

இதற்கு மாறாக முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் ஷரீஅத்திற்கு உயிரூட்டி, இஸ்லாத்தை நிலை நிறுத்துவதும், உனது தீய பண்புகளை அகற்றி உனது பண்புகளை செம்மைப்படுத்துவதும் உன் நோக்கமாயின், உனக்கு வாழ்த்துக்கு மேல் வாழ்த்துக்கள் கிடைக்கும்!

**ஒரு கவிஞர் கூறுகின்றார்.**

**''இறைவா! உன் திருமுகம் காண்பதற்காக அன்றி விழித் திருப்பது வீணாகும்! உன்னல்லாதவர்களுக்காக கண்ணீர் சிந்துவதும் விண்தான்,''**

**றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறினார்கள்,**

**''நீ விரும்பியபடி வாழ் ! ஆனால், ஒரு நாள் நீ மரணிக்கவே செய்வாய் ! நீ விரும்பியவரை நேசிக்கலாம். அவரை நீ பிரியவே செய்வாய் ! நீ விரும்பியபடி செய்படு! அதற்கான கூலியை நிச்சயமாக நீ பெற வேண்டி வரும்''.**

மகனே! தர்க்கவியல், அறிவியல், உயிரியல், விண்ணியல், இலக்கியம், இலக்கண யாப்பியல், அணி இலக்கியம், கவிதையியல், போரியல் யுத்ததந்திரம் உள்ளிட்ட கலைகளை நீ கற்பதனால் நீ அடையும் பயன் என்ன? உனது வாழ்நாளை இதில் வீணடிக்கின்றாய்! **"பிரபலம்"** தவிர்த்து எப்பயனும் இதில் கிடையாது!

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வழங்கப் பட்ட இன்ஜீல் வேதத்தைப் படித்தேன். அதில் பின்வரும் குறிப்பையும் கண்டேன்; மையித்தை சந்தூக்கில் வைத்ததிலிருந்து கப்றின்

ஓரம் வரை கொண்டு சேர்ப்பதற்குள் அல்லாஹுத் ஆலா 40 கேள்விகள் கேட்கின்றான் என்று அதில் எழுதப்பட்டுள்ளது.

**அதில் முதற் கேள்வி :**

அடியானே! உன்னை நீ மக்களுக்குப் பிரபல்யப்படுத்து வதற்காக எத்தனை ஆண்டுகள் புறக்கல்வியைக் கற்றாய்? ஆனால், உன்னை நீ தூய்மைப்படுத்துவதற்கும் எனது திருப்தியைப் பெறுவதற்காக ஒரு மணி நேரத்தையாவது நீ ஒதுக்கியிருக்கின்றாயா? முகஸ்த்துதிக்காக ஏன் வணங்குகின்றாய்?

தூய மனதுடன் என்னை மட்டும் வணங்குவதுதான் உனக்குள்ள கடமை! நன்மையும், தின்மையும் என் கைவசம் தான் இருக்கின்றது என்ற எனது இறைநாதம் எப்பொழுதும் உன் மனதில் ஒலித்துக் கொண்டே இருக்க வேண்டும்!

மகனே! அறிவில்லாத செயல் பைத்தியம்! செயலில்லாத அறிவு பாழ்! பாவச் செயல்களை விட்டும் உன்னைத் தடுக்காத, அல்லாஹ்வை வணங்குவதை விட்டும் உன்னைத் தூண்டாத, அறிவுத்துறைகளில் எதுவும் மறுமையில் நரக நெருப்பையோ, அதன் கொடூரத்திலிருந்தோ உன்னை ஒரு போதும் தடுக்காது.

கடந்த காலச் செயற்பாட்டின் குறைகளைப் புரிந்து இன்றே நீ செயற்படத் துணியாவிட்டால், உனது மரணத்தின் பின் "என்னை மீண்டும் உலகத்திற்கு அனுப்பிவை! நற்செயல்கள் புரிந்து நல்லவனாக மீண்டும் திரும்புவேன் என்று கூறுவாய்! முட்டாள்! அங்கிருந்து தானே இங்கு நீ வந்தாய்! என்று உனக்குப் பதில் கூறப்படும்.

மகனே! உனது ஆத்மாவுக்கு உரம்கொடு! நீ மரணித்த பின், கப்றுக்குள் செல்ல வேண்டியுள்ளது,

உனக்கு முன் சென்றவர்கள் ஒவ்வொரு வினாடியும் உன் வருகையை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கின்றனர். அதனால்,

உடலால் முழு முயற்சியோடு நற்கிரிகைகளைச் செய்! நற்செயல் களின்றி அங்கு செல்வது ஆபத்தானது. என்று உன்னை எச்சரிக்கின்றேன்.

**ஹளரத் அபூபக்கர் சித்திக் றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.**

**''உடல்கள் பறவைகளின் கூட்டை அல்லது விலங்குகளின் தொழுவத்தை ஒத்துள்ளன இவ்விரண்டில் நீ எதை ஒத்தவன் என்பதை தீர்மானித்துக்கொள்!**

**மேலுலகின் உயர் பறவைக்கூட்டத்தைச் சேர்ந்தவனாக நீ இருப்பீராயின் உன் இரட்சகனின் பக்கம் திரும்பிச் சென்று அங்குள்ள இனிய இராகங்களைக் கேட்டு இன்புற்று சொர்க்கத்தின் சாயுச்சிய இடத்தில் வீற்றிருப்பாய்''!.**

**அல்லாஹுத்தஆலா உன்னைப் பாதுகாக்க வேண்டும்.** நீ விலங்குகளின் கூட்டதிலிருப்பாயானால் **"இவர்கள் ஆடு மாடு ஒட்டகங்கள் போன்ற விலங்குகளை ஒத்தவர்கள். எனினும், அதை விடவும், வழிகேடர்கள்"** என்ற திருக்குர்ஆனில் கூறப் பட்ட கூட்டத்தைச் சேர்ந்தவனவாய்! உனது இருப்பிடம். **"ஹாவியா",** என்ற நரகமாக மாறிவிட்டது என்பதை மிக உறுதியாக ஏற்றுக்கொள்!

ஒரு தினம் ஹளரத் ஹஸனுல் பஸரி றஹ்மதுள்ளாஹி அலைஹி, அவர்களுக்கு ஒரு கிண்ணத்தில் குளிர்பானம் வழங்கப்பட்டது. கிண்ணத்தைக் கையிலெடுத்ததும் மூர்ச்சையாகி விட்டார்கள். கிண்ணமும் கைநழுவி கீழே விழுந்து விட்டது. சுய நினைவு திரும்பிய பின் உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டதற்கு,

**"நரகவாதிகள் சொர்க்கவாதிகளைப் பார்த்து, தண்ணீர் கேட்டு கெஞ்சம் அவர்களின் மேலெண்ணம் என் நினைவுக்கு வந்தது"** என்று பதில் கூறினார்கள்.

**மகனே! அறிவு மட்டும் போதும் நற்கிரிகைகள் தேவையில்லை. என்பது உனது நம்பிக்கையாயின், நடுநிசியில் பாவத்தை விட்டும்**

**தௌபாச் செய்கிறவர்கள் இருக்கின்றனரா? தேவைகளை என்னிடம் கேட்பவர்கள் இருக்கின்றார்களா? என்று அல்லாஹுத்தஆலா ஏன் கேட்க வேண்டும்?**

இப்படி நடு நிசியில் அழைப்பதின் காரணம், இரவின் பிற் பகுதியில் மிகவும் குறைவானவர்கள் தான் உறங்குகின்றனர் என்பது வெளிப்படையாகும்.

**ஹளறத் அப்துல்லாஹ் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் வணக்கத்தைப் பற்றி சஹாபாக்களில் ஒரு கூட்டத்தினர் றஸூலுள் ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களிடத்தில் பாராட்டிக் கூறினார்கள்.**

அதற்கு, அவர் தஹஜ்ஜுத் தொழுவாராயின், நல்லவர் தான் என்று நபியவர்கள் பதில் கூறினார்கள். ஒரு தினம் ஒருவரைப் பார்த்து நபியவர்கள் கூறினார்கள்.

**“அதிகமாக இரவில் தூங்காதே! இரவில் அதிகமாகத் தூங்கு பவர் மறுமையில் ஏழையாக இருப்பார்”.**

**“இரவின் பிற்பகுதியில் தஹஜ்ஜுத் தொழுவீராக”
- அல் குர்ஆன்: (17:79)**

என்பது கட்டளை வாக்கியமாகும்.

**(நல்லடியார்களாகிய) “அவர்கள் அதிகாலை வேளையில் பாவமன்னிப்புத் தேடுகின்றனர்” - அல் குர்ஆன்: (3:17)**

**“இன்னும் அவர்கள் சஹர் வேளையில் பாவமன்னிப்புத் தேடுகின்றவர்களாக இருந்தனர்”. - அல் குர்ஆன் : (51:18).**

என்ற வசனங்கள் பாராட்டுக்குரியவையாகும்.

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறினார்கள்:**

**அல்லாஹ்வுக்கு விருப்பமான சப்தங்கள் - மூன்று**

1) **சேவல் கூவும் சப்தம்**

2) **திருக்குர்ஆன் ஓதும் சப்தம்**

3) **இரவின் பிற்பகுதியில் அல்லாஹ் விடத்தில் பாவமன்னிப்புத் தேடும் சப்தம்**

**ஹளரத் சுப்யானுத்தௌரி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறினார்கள்.**

**"அல்லாஹுத் தஆலா ஒரு காற்றைப் படைத்திருக் கின்றான். இரவின் பிற்பகுதியில் அல்லாஹ்வைத் திக்று செய்து அவனிடம் பாவமன்னிப்புத் தேடுகின்றவர்களின் சப்தத்தை அக்காற்று சுமந்து சென்று அல்லாஹ் விடத்தில் சேர்த்து வைக்கும்"** மேலும் கூறினார்கள்.

**"இரவானதும், அல்லாஹ்வை வணங்குவதற்காக எழுந்திருங்கள்"** என்று அல்லாஹ்வின் அர்ஷுக்குக் கீழிருக்கும் ஒரு வானவர் அழைப்பு விடுப்பார்.

அல்லாஹ் தௌபீக் செய்தவர்கள் எழுந்து தொழுவார்கள். பின், நடு இரவில் அல்லாஹ்வை ஒழக்கத்துடன் பக்குவமாக தொழுபவர்கள் எழுந்திருங்கள் என்று ஒருவானவர் அழைப்பு விடுப்பார்! அல்லாஹ்வுக்கு வழிப்பட்டவர்கள் எழுந்து ஸஹர் நேரம் வரை தொழுவார்கள்.

ஸஹருடைய நேரமானதும் **"அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுபவர்கள் எழுந்திருங்கள்"** என்று ஒரு வானவர் அழைப்பு விடுப்பார் இவ்வழைப்பை ஏற்றவர்கள் எழுந்து அல்லாஹ்விடத்தில் பாவ மன்னிப்புத் தேடுவார்கள், கிழக்கு வெளித்து சுப்ஹுடைய நேரம் வந்ததும் **"அல்லாஹ் விடம் பாவ மன்னிப்புத் தேடுபவர்கள் எழுந்திருங்கள்"** என்று ஒரு வானவர் அழைப்பு விடுப்பார் இவ்வழைப்பை ஏற்றவர்கள் எழுந்து அல்லாஹ்விடத்தில் பாவ மன்னிப்புத் தேடுவார்கள்.

கிழக்கு வெளித்து சுப்ஹுடைய நேரம் வந்ததும் **“அல்லாஹ்வை மறந்து ஆழ்ந்த உறக்கத்திலிருப்பவர்களே! விடிந்துவிட்டது எழுந்திருங்கள்”!** என்று ஒரு வானவர் கூறுவார்.

இவரின் சப்தத்தைக் கேட்டு மரணித்தவர்கள் கப்றிலிருந்து எழும்புவது போன்று படுக்கையிலிருந்து எழும்புவார்கள்,

**மகனே! ஹளறத் லுக்மானுல் ஹகீம் அவர்கள் தங்களுடைய மகனுக்குச் செய்த வஸிய்யத் தொகுப்பில் பின்வரும்வஸிய்யத்தும் பதிவாகியுள்ளது.**

மகனே! உன்னை மிகைத்த புத்திசாலியாக சேவலை ஆக்காதே! அது இரவின் பிற்பகுதியில் அல்லாஹ்வை திக்று செய்து அழைப்பு விடுக்கின்ற போது நீர் அயர்ந்து தூங்குகின்றீர்!

இக்கூற்றின் எதார்த்தமான கருத்தை ஒரு கவிதையில் இப்படிக் கூறப்படுகின்றது.

இரவின் விளிம்பில் மரக்கிளையில் தங்கும் புறாகுறு குறுக்கிறது, நானோ ஆழ்ந்து உறங்குகின்றேன் இறையாலயத்தின் மீது ஆணை! நான் செய்ததெல்லாம் பொய்! இறை காதலினால் கண்ணீர் சிந்தியது உண்மை எனின், புறா என்னை நிச்சயம் முந்தியிருக்கவே முடியாது!

இறை காதலில் மெய் மறந்தேன் என்று புகழும் நான் அழவில்லை!

விலங்குகள் அழுது கொண்டேயிருக்கின்றன.

றஸூலுள்ளாஹிஸல்லலல்லாஹு அலைஹி வசல்லமவர்களை ஷரீஅத்தின் ஏவல், விலக்கல்களில் பெருமானாரின் சொல், செயல்களில் முழுமையாகப் பின்பற்றுவதைத்தான் வணக்கம், வழிபாடு, என்று கூறப்படும்.

அதனால் **“வணக்கம்”** என்றால் என்ன வழிபாடு என்றால் என்ன? அதன் எதார்த்தம் எது? என்பதை அறிந்து கொள்வது தான் கல்வியின் சாரமாக இருக்க வேண்டும்!

வாக்கும், செயலும் மனமும், உறுப்பும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களைப் பின்பற்றியதாக இருக்க வேண்டும்! பேச்சும், மௌனமும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் கட்டளைக்குட் பட்டதாக இருக்க வேண்டும்!

தனக்கு வணக்கமாகத்தெரிபவை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் கட்டளை மற்றும் வழிகாட்டுதலுக்கு உட்படாதிருக்குமாயின் அவை ஒரு போதும் இபாதத் ஆகாது மாறாக அது **"குற்றமாகும்."** இவ்வாறானவை நோன்பு, தொழுகை போன்றவையாக இருந்தாலும் சரிதான்,

மகனே! உனது வாக்கும் செயலும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹுவசல்லமவர்களின் கட்டளைக்குட்பட்டதாக இருத்தல் வேண்டும்.

ஒரு மனிதனின் அறிவும், செயலும் ஷரீஅத்தைப் பின் தொடரவில்லையாயின் – அது வழிகேடாகும் ஷரீ அத்தைப் பின் பற்றாத வழி சத்தியத்தை விட்டும் வெகுதூரம் விலகிச் சென்று விட்டது.

இதனால் தான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுக்கு முன்னிருந்த அனைத்து அறிவுத் துறைகளும் மாற்றப்பட்டுள்ளன.

இதனால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் தவிர்ந்த மற்றவர்களின் எக்கருத்தையும் நீ எடுக்காதே! நீ தேடிக் கற்றுக் கொண்டவை அனைத்தும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றாதிருப்பின் அவை அனைத்தும் பாழானவை தான். இப்பாழான அறிவுத் துறைகளுக்காக நீ செய்த அனைத்து வகையான முயற்சிகளும் பயனற்றதாகி விடும்.

ஸூபியாக்களால் இறை போதையில் மொழியப்பட்ட, பொருள் மயக்கமான அல்லது பிழையானதாகத் தோன்றும் **"அனுபூதி"**க் கருத்துக்களிலும் கவனம் செலுத்தாதிருப்பது உனக்கு வாஜிபாகும்.

உண்மையான ஸூபிகளின் "தஸ்வ்வுப்" வழி என்பது விடா முயற்சியும், மனப்போராட்டமும் செய்து இச்சைகளையும், பேராசைகளையும் முறியடித்து, ஆத்மீக **"யோக உள்நோக்கு என்ற "முறாக்கபா பயிற்சி"** என்ற வாளினால் கீறிக் கிழித்து பெற்றுக் கொள்ளப்படுகின்ற உயர் பாதையாகும்.

அணி இலக்கியம். ஆழமான தத்துவம், நுட்பமான கருத்துக்கள் மூலம் பெறுகின்ற வழி இதுவல்ல!

நழினிமாகப் பேசும் நாவன்மையும், மருட்சியால் துவண்டு போன மனமும் நற்பேறு கெட்டுப் போய்விட்டது என்பதற்கு இது தக்க அடையாளமாகும். மனப் போராட்டம் (முஜாஹதா) என்ற சத்திய வாளினால் மனதில் வளர்ந்திருக்கும் பேராசைகளை வெட்டிச் சரிக்காத வரை மனதில் **"மஃரிபத்"** என்ற பேரொளி ஒருபோதும் சுடர்விடாது,

மகனே! நீ கேட்டவையில் சிலவற்றிற்கு பேச்சிலோ, எழுத்திலோ விளக்கம் கூற முடியாது. தஸவ்வு பின் சத்தியப்பாதையில் கால் பதித்து சுய மரணத்தைத் தழுவிக் கொண்டால், அனைத்தும் உனக்குத் தானாகத் தெரிய வரும். பேரின்பக் காதல் தொர்பான அனுபூதிப் படிப்பு போதனைக்குட்பட்டதல்ல! மனதில் தானாக உற்பத்தியாகக் கூடியது. அதனால்தான் இவை அனுபவம் தொடர்பானவை எனப்படுகின்றது.

மேற்கூறிய நிலைக்கு உன்னால் முன்னேற முடியாவிட்டால், **"மஃரியா"** வை உன்னால் பெற்றுக் கொள்ள முடியாது. இது ஒரு படியிலிந்து மறுபடிக்கு ஏறிச் செல்வது போன்றதாகும்.

**"அனு பூதி இன்பம்"** என்பது **காதல் 'இஷ்கு "அன்பு" "மஹப்பத்"** என்பதன் மறுபெயராகும்.

அன்பையும், காதலையும் வார்த்தையால் விளக்க முடியாது. எழுத்திலும் விவரிக்க முடியாது.

ஹல்வாவின் திப்திப்பையும், கசப்பின் கடுமையையும் அதைப் பவித்துத்தான் அறிய முடியும்! இவை ஆத்மீக அனுபவம்

தொடர்பானவை! இதனை புலச் சார்புக்குட்படுத்தி விளக்க முடியாது.

ஆண்மையில்லாதவன் உடலுறவின் இன்பம் எப்படியிருக்கும்? என்று கடிதத்தில் எழுதி அனுப்புமாறு தனது நண்பனுக்கு மடல் வரைந்தான் அதற்கு ஆண்மையற்றவன் என்று மட்டும் தான் இதுவரை உன்னை நினைத்தேன். உனக்கு ஆண்மையுமில்லை புத்தியுமில்லை என்பதை இப்போது தான் புரிந்து கொண்டேன் என்று அவனுக்கு அவனுடைய நண்பன் பதில் எழுதினான். அனுபவித்து அறிய வேண்டிய இன்பத்தை எழுத்தில் விளக்க முடியாது அல்லவா?

மகனே! உனது கேள்விகளில் சில இவை தொடர்பானவை யாகும். அவற்றைப் பேச்சால், எழுத்தால் விளக்க முடியாது இது தவிர்ந்த உமது கேள்விகளுக்கு விளக்கம் தர முடியும்! இவற்றிற்கான விளக்கங்கள் எனது நூற்களில் குறிப்பாக **"இஹ்யா உலூமுத்தீனில்"** கூறப்பட்டுள்ளன ஆயினும், நீர் கேட்டவையில் சிலவற்றிற்குச் சுருக்கமாகவும், சிலேடையாகவும் கூறுகின்றேன் கேள்!

ஆன்மிக வழியில் நடப்பவன் அவசியம் கைக் கொள்ள வேண்டியவை எவை? என்பதும் உனது கேள்வியில் ஒன்று!

இதற்கான பதில் வருமாறு !



# 2. ஆத்மீக வழியில் செல்பவர் கடைப்பிடிக்க வேண்டியவை:

ஆத்மீக வழியில் கால் பதிப்பவர் நான்கு கடமைகளைக் கண்டிப்பாக கடைபிடிக்க வேண்டும்.

1. சுன்னத் வல் ஜமாஅத்தின் அழகிய கொள்கையில் உறுதியாக இருக்க வேண்டும்.! பித்தத்தை முற்றிலும் தவிர்க்க வேண்டும்!
2 பாவம் செய்வதில்லை என்ற முழுமையான முடிவுடன் பரிசுத்தமான தவ்பாச் செய்ய வேண்டும்.
3 உனது எதிரியும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக அடியார்களின் கடமைகளை நிறைவேற்ற வேண்டும்.
4 ஷரீஅத் கடமைகளை நிறைவேற்றுவதற்கான தேவையான அறிவையும் மறுமையில் விமோசனத்தை பெற்றுத்தரும் பயன் மிக்க கல்வியையும் போதுமான அளவு தெரிந்திருக்க வேண்டும்.

**ஹளறத் ஷிப்லி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.**

தரீக்கத்தைச் சேர்ந்த நானூறு ஷேகுமார்களைச் சந்தித்து நான்காயிரம் ஹதீதுகளைக் கற்றுக்கொண்டேன்.

அவற்றிலிருந்து ஒரே ஒரு ஹதீதை மட்டும் எடுத்துக்கொண்டு ஏனையவற்றை விட்டுவிட்டேன்.

பின்னர் அந்த ஒரு ஹதீதை ஆராய்ந்தேன். அதில்தான் மறுமையின் விடுதலையும் வெற்றியும் இருப்பதை தெரிந்து கொண்டேன்.

முன்னோர் பின்னோர் உள்ளிட்ட எல்லோரினதும் ஞானங்கள் அனைத்தும் அதில் அடங்கியுள்ளன என்பதையும் புரிந்து கொண்டேன்.

அந்த ஹதீஸ் பின்வருமாறு,

**“இவ்வுலகத்திற்காக அதில் தங்கும் அளவுக்கு நற்கிரியை செய்! மறுமைக்காக அங்கு நீ நிலையாகத் தங்கும் அளவுக்கு நற்செயல் புரி!”** அல்லாஹ்வுக்காக உனதுதேவை அவனிடம் இருக்கும் அளவுக்கு நல்லமல்கள் செய்! நரகத்திற்காக அதில் உனக்கிருக்கும் பொறுமையின் அளவுக்கு நல்லமல்கள் செய்!

மகனே! மேற்கண்ட ஹதீதின் உட்பொருளை நீ விளங்கிக் கொண்டால் இன்னும் அதிகமாக மேலும் படிக்க வேண்டும் என்ற தேவை உனக்குக் கிடையாது என்றுதான் நான் கூறுவேன்.

அதிகமாகக் கற்று, திரண்ட ஞானத்தைப் பெற்றுக் கொள்வது பர்ளுக் கிபாயாவாகும்.! இது எல்லோருக்கும் கடமை இல்லை.!

இன்னுமொரு சரித்திரத்தையும் கூறுகின்றேன் அதனையும் சிந்தனையில் இருத்தி கொள்!

ஹளறத் காத்தமுல் அஸம்மு ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்ற பெரியார் அவர்கள் மாபெரும் ஞானியான ஷகீக்குல் பல்கி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் ஒரு மாணவர் ஆவார் .

ஒரு தினம் ஹளறத் ஷகீக்குல் பல்கி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் தனது மாணவரான ஹளறத் ஹாத்தமுல் அஸம்மு றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களைப் பார்த்து,

எனது பேச்சுக்களை எத்தனை ஆண்டுகள் கேட்டு வருகிறீர் என்று கேட்டார்? 30 ஆண்டுகள் என்று மாணவர் ஹாத்தமுல்அஸம்மு பதிலளித்தார்.

இத்தனை ஆண்டுகளாக என்னிடமிருந்து நீ கற்றவை எவை? அதனால் நீர் அடைந்த பயன் யாது? என்று மாணவரைப் பார்த்து ஷகீகுல்பல்கி கேட்டார்கள்.

கற்பதிலும் ஆத்மீகப் பயிற்சியிலும் எனது வாழ்நாள் கழிந்து விட்டது இக்காலங்களில் 8 விஷயங்களைத்தான் உங்களோடிருந்த காலத்தில் கற்றுக்கொண்டேன். எனது விடுதலையும், மோட்சமும் அவற்றில் இருப்பதாக நான் கருதுகிறேன் என்று அடக்கத்தோடு ஞானி காத்தமுல் அஸம்மு ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பதில் கூறினார்கள்.

நீர் அடைந்த பயன் யாவை? எனக் கூறும் என்றார் ஆசிரியர்!

மாணவர் பின்வருமாறு விளக்கினார்.

1. உலக மாந்தர்களைக் கவனித்தேன். இவர்கள் அனைவருக்கும் அவர்கள் அதிகம் நேசிக்கும் நண்பர்கள் இருக்கிறார்கள் என்பதை புரிந்து கொண்டேன்.

அந்த நண்பர்களில் சிலர் மரண நோய் வரையிலும் கூடவே இருக்கின்றனர். பின்னர் அவரை விட்டும் பிரிந்து விடுகின்றனர்.

இன்னும் சில நண்பர்கள் அவர் மரணித்த பின் அவருடைய கப்ரு வரையிலும் வந்து அடக்கம் முடிந்ததும் பிரிந்து செல்கின்றனர். இவர்களில் எவரும் அவரோடு கப்றுக்குள் செல்வதில்லை!

கப்றுக்குள் வந்து தன்னுடன் பிரியாமல் இருக்கும் நண்பன் தான் எனது உற்ற நண்பன் என்பதை ஆழ்ந்த சிந்தனைக்குப் பின் முடிவுக்கு வந்தேன். அதனால் என்னோடு சேர்ந்து கப்றுக்குள் வந்து என்னை விட்டுப்பிரியாமல் ஒட்டி உறவாடி எனது கப்ருக்கு ஒளி ஏற்றுகின்ற எனது நல்லமல்களை எனது உற்ற நண்பனாக எடுத்துக்கொண்டேன். எனது நல்லமல்கள் ஒருபோதும் என்னை தனிமைப்படுத்தி விடாது என்பதையும் தெரிந்து கொண்டேன்.

2. உலக மக்களைப் பார்த்தேன். அவர்கள் ஒவ்வொருவரும் மனோ இச்சைக்கும், பேராசைக்கும் அடிமைப்பட்டுக் கொண்டிருப்பதை கண்டேன்.

**“எவர் தனது இரட்சகனை அஞ்சி தனது ஆத்மாவை பேராசையில் இருந்து விலக்கினால் அவர் இருக்கும் இடம் சொர்க்கமாகும்” (40 : 41)**

என்ற திருமறையில் வரும் திருவசனத்தை கண்டேன். திருக்குர்ஆன் அல்லாஹ்வின் பேச்சு! அது கூறுவது முற்றிலும் உண்மை! அதில் எதுவித சந்தேகமும் இல்லை! அதனால்,

எனது நப்ஸுக்கும், பேராசைக்கும் மாறு செய்து வணக்கத்தில் அமைதி வரும் வரை இதே முடிவில் இருப்பது என்று துணிந்தேன்.

3. உலக மாந்தர்களை பார்த்தேன். அழியும் இவ்வுலகில் சந்தோஷமாக வாழ்வதற்காக கடினமாக உழைத்து செல்வத்தைப் பெருக்கி அதில் மகிழ்ச்சி அடைகின்றனர் .பின்னர்,

**“உங்களிடம் இருப்பவை எல்லாம் அழியக் கூடியவை! அல்லாஹ்விடம் இருப்பவைதான் நிலைத்திருப்பவை!” (16:96)**

என்ற திருமறை வசனத்தை பார்த்தேன். அதனால், நான் சேர்த்து வைத்திருந்த எனது சொத்துக்களை எல்லாம் ஏழைகளுக்கும் தேவையுள்ளவர்களுக்கு அறம் செய்தேன். நான் செய்த இவ்வறம் அல்லாஹ்விடம் அமானிதமாக பாதுகாப்பாக இருக்கும்.! அதன் பயனை மறுமையில் நான் சுகமாக அனுபவிப்பேன்.

4. சிலரை உற்றுநோக்கினேன். அவர்கள் குடும்பம், மற்றும் தன்னை பின்பற்றுபவர்களின் தொகையை வைத்து புகழோடும், பெருமையோடும், செருக்கோடு வாழ்வதை கண்டேன்,! இப்படி வாழ்வதை அவர்கள் பெருமையாக நினைப்பதையும் பார்த்தேன்.!

இன்னும் சிலர் தனது திரண்ட செல்வத்தையும், குடும்பத்தில் அதிக எண்ணிக்கை உள்ளவர்களையும் வைத்து பெருமை பேசுவதையும் அவதானித்தேன்.

வேறுசிலர் மக்களின் சொத்துக்களை சூறையாடி அவர் களுக்கு அநியாயம் புரிந்து அக்கிரமம் செய்து அவர்களை கொலை செய்வதைக் கூட பெருமையாக கருதுகின்ற மக்களையும் கூட நான் பார்த்திருக்கிறேன்.

மற்றும் சிலர் சொத்துக்களை அழித்து வீண் விரையம் செய்து ஊதாரித்தனமாக நடப்பதைப் பெருமையாக கருதுவதையும் கண்டேன். பின்னர்,

திருமறையில் வருகின்ற பின்வரும் வசனமான,

**"உங்களில் அதிகம் கண்ணியம் உள்ளவர் உங்களில் அதிகம் தக்வா உள்ளவராகும்" (49:13)**

என்ற திருமறை வசனத்தை கண்டு அல்லாஹ்வின் கூற்று முற்றிலும் உண்மை! என்று நம்பி மக்களின் கற்பனையான மேல் எண்ணங் களும், மதிப்புகளும் வெறும் பாழ்! என்ற முடிவுக்கு வந்தேன்.

5. மனிதர்களை கவனித்தேன். அவர்களில் சிலர் மீது சிலர் குறை கூறித் திரிகின்றனர். ஒருவர் மற்றவர் மீது பொறாமைப் படுவதையும் கண்டேன். இவர்கள் இவ்வாறு பொறாமைப் படுவதற்கு பிரதானமான காரணம், அவர்களின் செல்வம், பதவி, அறிவு உள்ளிட்ட சிறப்பும், கண்ணியமும் தான் என்பதை தெரிந்து கொண்டேன்.

**"உலகத்தில் வாழ்வதற்குரிய இரணத்தை அவர்களுக்கு மத்தியில் பங்கீடு செய்து உள்ளோம்"**

என்ற திருக்குர்ஆன் வசனத்தை நன்கு சிந்தித்து ஒருவரின் செல்வம், பதவி, கண்ணியம் உள்ளிட்டவை ஆதியிலே அல்லாஹுத்தஆலா பங்கீடு செய்து விட்டான். என்ற தீர்மானத் துக்கு வந்தேன். அதனால் மற்றவர்களின் செல்வம் பதவி, கண்ணியம் உள்ளிட்டவையில் வெறுக்கும் உரிமை தனக்கு இல்லை! அடுத்தவர் மீது பொறாமைபடுவதோ, போட்டி போடுவதோ தவறு என்ற முடிவுக்கு வந்தேன்.

அல்லாஹுத்தஆலா தனக்கு ஆளந்ததில் திருப்தி கண்டேன்.

6. ஏதோ ஒன்றுக்காக ஒருவரையொருவர் பகைத்து வாழும் மனிதர்களைப் பார்த்தேன். பின்னர்,

**"நிச்சயமாக சைத்தான் உங்களின் விரோதி! அதனால், அவனை விரோதியாகவே எடுத்துக்கொள்ளுங்கள்" (35:6)**

இந்த திருமறை வசனத்தை பற்றிச் சிந்தித்து தனது விரோதி ஷைத்தான் மட்டும்தான் என்று முடிவு செய்து எவருடனும் பகைமை பாராட்டுவதில்லை என்று தீர்மானித்தேன்.

7. பணம் சம்பாதிப்பதில் ஹலால் ஹராம் பேணாமல் பிழையான வழியில் அதிக முயற்சியுடன் பணம் திரட்டி தன் தகுதியை கூட இழந்து கேவலப்பட்டு நிற்கும் மனிதர்கள் சிலரையும் நான் கண்டிருக்கிறேன்.

இதன்பின்னர்,

**“எந்தப் பிராணியும் அதற்கான உணவு அல்லாஹ்வின் மீது பொறுப்பாக இருந்தே தவிர பூமியில் வாழ்வது இல்லை!” (11:1)**

என்ற திருமறை வசனத்தைப் பற்றி சிந்தித்து திருக்குர்ஆனின் கூற்று முற்றிலும் உண்மை! நானும் பூமியில் வாழுகின்ற பிராணியை சேர்ந்தவன்தான்! எனது இரணமும், அவன் பொறுப்பில் தான் இருக்கிறது என்பதை விளங்கி அதில் பூரண நம்பிக்கை வைத்து அல்லாஹ்வை வணங்குவதில் எனது கவனத்தை திருப்பினேன்.

பின்னர் அல்லாஹ் அல்லாதவற்றை நேசிப்பதையும், அவற்றில் ஆசை வைப்பதையும் தவிர்த்துக் கொண்டேன்.

8. மனிதர்கள் ஒவ்வொருவரும் ஏதோ ஒன்றில் அல்லது யாராவது ஒருவரில் நம்பிக்கை வைத்திருப்பதை கண்டேன்! செல்வத்தை சிலரும், அதையொத்த மனிதர்களில் வேறு சிலரும் நம்பிக்கை வைத்திருப்பதை கவனித்தேன்.

பின்னர், திருமறையின் பின்வரும் வசனத்தை கண்டு சிந்தித்தேன்.

**“எவர் அல்லாஹ்வின் மீது முழுமையாக நம்பிக்கை வைக்கிறார்களோ அவருக்கு அவன் போதுமானவன். நிச்சயமாக அல்லாஹ் அவருடைய காரியத்தை அடைபவன். அல்லாஹ் ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு அளவை திட்டமாக அமைத்து வைத்துள்ளான்”. (65:3)**

அதனால் அல்லாஹ்வில் பூரணமாக நம்பிக்கை வைத்து, எனது அனைத்து காரியங்களையும் அவனிடம் பாரப் படுத்தினேன். அவன் எனக்குப் போதுமானவன்! பாரம் படுத்துவதற்கும் அவன் மிக சிறப்பானவன்.!

மேற்கண்ட எட்டு விடயங்களையும் செவிமடுத்த அறிஞர் ஷகீக்குல் பல்கி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

ஹாதமே! அல்லாஹுத்தஆலா உமக்கு தௌபீக் செய்வானாக! நீர் உயர்ந்த உன்னதமான கருத்துக்களை பகிர்ந்து உள்ளீர்! தௌறாத், ஸபூர், இன்ஜீல், புர்க்கான் ஆகிய நான்கு வேதங்களையும் நான் படித்துள்ளேன். நீர் கூறிய எட்டு விஷயங்களைத்தான் அவையும் கூறு கின்றன. நீர் கூறிய எட்டு விஷயங்களையும் பின்பற்றுபவர் நான்கு வேதங்களையும் பின்பற்றி ஒழுகியவராகக் கருதப்படுவார் என்று கூறி மாணவரின் அறிவு கூர்மையைப் பாராட்டினார்கள் அறிஞர் **ஷகீக்குல் பல்கி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள்.**



# 3. ஷைகின் அவசியம்

இறை பாதையில் செல்பவர் ஒரு காமிலான ஷெய்கைக் கைப்பிடித்து அவரைப்பின்பற்றுவது அவசியமாகும்.

இவர் தீய பண்புகளை அகற்றி நற்பண்புகளை விதைக்கக் கூடிய பயிற்சியை வழங்கக்கூடியவராக இருக்க வேண்டும். இவ்வாறு பயிற்சி வழங்குபவர்.

பயிருக்கு மத்தியில் முளைத்துள்ள களைகளையும் முட்பதர் களையும் நீக்கி உச்ச விளைச்சலைப் பெறுகின்ற திறமையான விவசாயியைப் போன்றிருப்பார்.

இறை வழி செல்லும் நபரின் தீய பண்புகளை இனங் காட்டி தவறை அவரிலிருந்து அகற்றி நற்பண்புகளை நிரப்பி, ஆத்மீகப் பயிற்சியளிக்கும் முழுத் தகுதி காமிலான ஷைய்குக்கு மட்டுமே உண்டு.

இவ்வழி காட்டுதலை இவரல்லாத எவராலும் செய்ய முடியாது.

மக்களுக்கு வழிகாட்டி அவர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு அவர்களைப் புனிதப்படுத்துவதற்காகத்தான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களை றசூலாக அனுப்பிவைத்தான் அவர்களின் **“பிரதிநிதி”** என்ற தகுதியிலிருந்து செயற்படுகின்றவராக அவர் இருத்தல் வேண்டும்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் பிரதிநிதியாக வருபவர் **“ஆலிமாக”** இருப்பது முக்கிய முதற் நிபந்தனையாகும். அதனால், அனைத்து ஆலிம்களும் கலீபாவாக ஷைய்காக வரமுடியாது, ஷைய்காக வருபவருக்கு தனித்துவமான பண்புகளும், தகுதிகளும் இருக்க வேண்டும்,

தவறான வழியிலிருப்பவர்களும் தங்களை **'ஷைய்கு'** என்று கூறி மக்களை ஏமாற்றாமலிருப்பதற்காக உண்மை யான **"ஷைய்கின்"** முக்கியமான பண்பு (தகுதி)களில் சிலவற்றை கீழே தருகின்றேன்' கவனமாகக்கேள் !

1) உலகில் இன்பத்தைத் தரும் செல்வத்தையும், பதவி யையும் வெறுக்கின்றவராக இருக்க வேண்டும்.

2) பைஅத் எடுக்கின்ற ஷெய்கிலிருந்து றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் வரை இடையறாது தொடர்பு (ஸில்ஸிலா) இருக்க வேண்டும்.

3) ஆத்மீக யோகப் பயிற்சிகளை மேற்கொண்டிருக்க வேண்டும்,

4) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் நமக்குத் தந்த ஷரீஅத்தின் கடமைகளை நிறைவேற்று பவர்களாக இருக்க வேண்டும்,

5) குறைவாக உணவு உட்கொண்டு, குறைவாக உறங்குபவராக இருக்க வேண்டும்,

6) தொழுகை, நோன்பு, தர்மம் உள்ளிட்டவையில் அதிக விருப்பமும், ஆர்வமும் உள்ளவராக இருக்க வேண்டும்,

7) நற்பண்புகளும், ஆத்மீக அகப் பார்வையும் உள்ளவராக இருக்க வேண்டும்.

8) பொறுமை, தொழுகை, நன்றி பாராட்டல், அல்லாஹ்வில் முழு நம்பிக்கைவைத்து, தனது பொறுப்புக்களை அல்லாஹ்விடம் பாரப்படுத்தக்கூடிய, தவக்குல், திருப்தி, அமானிதம், மௌனம், சகிப்புத்தன்மை, பணிவு, ஞானம், வாய்மை, வெட்கம், உள்ளிட்ட பண்புகள் அவர் நடத்தையில் பிரதிபலிக்க வேண்டும்.

இப்பண்புகளைப் பெற்றவர் றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் அருளை (பைழைப்) பெற்றவராக இருப்பார்,

9) தீய பண்புகளான கஞ்சத்தனம், பெறாமை, புறம், கூறுதல், கோள் சொல்லுதல், பெருமை, முகஸ்துதி, உலகப்பற்று, கோபம்,

தற்புகழ்ச்சி உள்ளிட்டவையிலிருந்து முழுமையாக நீங்கியிருக்க வேண்டும்.

மற்றவர்களிடம் கேட்டு அறிவைப் பெற்று விளக்கம் பகர்பவராக இல்லாமல் சுயமாக விளக்கம் கூறும் தகுதியைப் பெற்றிருக்க வேண்டும்

## ஷைய்கிடம் நடந்து கொள்ள வேண்டிய புறம் சார்ந்த ஒழுக்கங்கள்

1. எந்தச் சந்தர்பத்திலும் அவருடன் தர்க்கம் செய்யக்கூடாது
2. அவர் வேலையில் தலையிடக் கூடாது.
3. அவர் மறதியாகச் செய்பவையிலும் குறுக்கிடக்கூடாது,
4. அவருக்கு முன்னால் தொழுகை விரிப்பைப் போட்டுத் தொழக் கூடா! தொழுகை நேரத்தில் மட்டும் விரிப்பைப் போட்டுத் தொழுதுவிட்டு விரிப்பை அகற்றி விட வேண்டும்.
5. ஷைகின் முன் பர்ளான தொழுகைக்கு முன்பும், பின்பும் அதிகமாகத் தொழக் கூடாது.
6. ஷெய்கின் கட்டளைகளை முடிந்த வரை நிறைவேற்ற வேண்டும்,

## அந்தரங்க ஒழுக்கம்

1. ஷைய்கிடம் தேவையற்ற கேள்விகளை வெளிப்படையாகக் கேட்பதையும், அவரது பேச்சிலும், செயலிலும் குறை காண்பதையும் தவிர்க்க வேண்டும்,
2. ஷைய்கின் மீது தப்பெண்ணம் கொள்வதையும் தவிர்க்க வேண்டும்,
3. ஷைய்கின் மீது தப்பெண்ணம் கொள்வது நயவஞ்சகத்தின் வெளிப்பாடாகும்.
4. தனது மனதில் நல்லெண்ணம் வராவிட்டால், நல்லெண்ணம் வரும் வரை ஓதுங்கியிருக்க வேண்டும், ஷைய்த்தானின்

ஆதிக்கம் மனதில் மேலோங்காமல் இருப்பதற்காக மனோ இச்சைக்குட்பட்டுள்ள கட்டுப்பாடில்லாமல் நடப்பவர்களின் உறவிலிருந்து விலகி இருக்க வேண்டும். இக்குணம் கொண்டவர்கள் ஜின்களாகவும் இருக்கலாம். மனிதர்களாகவும் இருக்கலாம்,

5. எல்லா நிலையிலும் செல்வத்தைவிட ஏழ்மையைத் தெரிவு செய்து கொள்ள வேண்டும்,

6. இறைவன் பக்கம் தஞ்சம் கொள்ளும் மனப்பக்குவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இவையனைத்தும் இறைவழி நடக்கும் முரீது கடைப்பிடிக்க வேண்டிய கடமையாகும்.

## தஸவ்வுபின் எதார்த்தம்

தஸவ்வுப் என்றால் என்ன? என்று நீ கேட்கின்றாய்! சொல்கின்றேன் - நன்றாய் கேள்!

தஸவ்வுப் என்பது இரு விடயங்களுக்கான பெயராகும்.

1) ஷரீஅத்தின் கடமைகளை தளர்வின்றி உறுதியாகப் பின்பற்றல்,

2) மக்களுடன் இணங்கி சகவாழ்வு வாழ்தல்

ஷரீ அத்தில் உறுதியாக நின்று கொண்டு மனிதப் பண்புகளை வெற்றி கொள்பவர்தான் **“சூபி”** ஆவார்! அல்லாஹ்வின் கட்டளைகளை நிறைவேற்றுவதில் **“இஸ்திகாமத்”** இருக்க வேண்டும் தனது விருப்பங்களையும் சந்தோஷங்களையும் அல்லாஹ்வுக்காகத் தியாகம் செய்வது தான் **“இஸ்திகாமத்”** ஆகும்.

மக்களுடன் இணங்கி சக வாழ்வு, வாழ்தல் என்பது மக்களுடன் சுயநலத்துடன் பழகாமல் பொது நலத்துடன் பழகுவதாகும்.

பொது நலனுக்காகத் தனது விருப்பங்களையும், நலன்களையும் ஷரீஅத்தின் எல்லைக்குள் நின்று கொண்டு அற்பணிக்க வேண்டும்.

## அடிமைத்துவத்தின் எதார்த்தம்

**"உபூதிய்யத்"** அடிமைத்துவம் என்றால் என்ன? என்றும் நீ கேட்கின்றாய்! இதில் மூன்று விடயங்கள் அடங்கியுள்ளன.

1) ஷரீஅத்தின் சட்டங்களைப் பேணி நடத்தல் பாதுகாத்தல்

2) அல்லாஹ்வின் விதியில் உள்ள தனது பங்கை திருப்தியுடன் ஏற்றுக்கொள்வது.

3) தனது ஆசைகளையும், விருப்பங்களையும் துறந்து விட்டு அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தைத் தேர்ந்து திருப்திகாணல்.

## தவக்குலின் எதார்த்தம்

**"தவக்குல்"** என்றால் என்ன என்பதும் உன் கேள்விகளுள் ஒன்று

**"தவக்குல்" என்பது அல்லாஹ்வின் வாக்கில் முழு நம்பிக்கை வைப்பது.**

**அல்லாஹ¬த்ததலா உனக்கு விதித்தவை நிச்சயம் கிடைக்கும்.** என்று நம்புவது உனக்கென்று விதிக்கப்பட்டதை உலகம் திரண்டாலும் மாற்ற முடியாது. என்பதில் அசையாத நம்பிக்கை இருப்பதற்குப் பெயர்தான் **"தவக்குல்"** ஆகும்.

## இக்லாஸின் எதார்த்தம்

இக்லாஸ் என்றால் என்ன? என்றும் நீ கேட்கின்றாய்?

அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை நாடிச் செய்கின்ற அனைத்து செயல்களும் **"இக்லாஸ்"** என்பதற்குள் அடங்கும். மக்களின் பாராட்டை உனது மனம் விரும்பக் கூடாது! பாராட்டுக் களால் உனது மனம் உவகையடையக்கூடாது!

மக்கள் உன்னைத் தூற்றுவதாலோ, இழித்துரைப்பதாலோ உனது மனம் சோர்வடைந்து கவலைப்படக் கூடாது. **"முகஸ்துதி"** என்பது மக்கள் கொடுக்கின்ற கண்ணியத்தினாலும், அவர்களின்

பாராட்களிருந்தும் தான் வெளிப்படுகின்றது என்பதை நீ முக்கியம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

உன் மனதில் "**முகஸ்துதி**" வராமல் தடுப்பதற்கும், மனதில் பதிந்த முகஸ்துதியை மனதை விட்டும் வேரோடு வெட்டி வீசுவதற்குமான வழியாதெனில், **"உலகில் நடப்பவை யாவும் அல்லாஹ்வின் நாட்டத்தினாலும், அவனின் ஆற்றிலினாலும் தான் நிகழ்கின்றன என்பதில் நீ உறுதியாக நிற்க வேண்டும்".**

**"உலகிலுள்ள அனைத்தும் எதுவித (சுய) சக்தியுமில்லாத உயிரற்ற கற்கள் போன்றவை என்றும், இவற்றினால், உனக்கு நன்மையோ, தின்மையோ செய்யமுடியாதவை என்றும் நம்ப வேண்டும்".** இந்த நம்பிக்கை உன் மனதில் ஆழமாகப் பதியுமாயின் "**முகஸ்துதி**" உன்னை விட்டும் ஓடி விடும்.

படைப்புக்கும் சக்தி உண்டு என்று நீர் நம்பும் வரை உன் மனதிலிருந்து "**முகஸ்துதி**" ஒருக்காலும் நீங்கவேமாட்டாது.

மகனே! நீ கேட்ட ஏனைய கேள்விகளுக்கான விடைகள் எனது நூற்களில் உள்ளன. அதைத் தேடிப் படி! நீ கேட்டவையில் சில வற்றிற்கு விடை எழுதுவது ஹறாமாகும்.

நான் குறிப்பிட்ட படி நீ செயல்பட்டால் நீ அறியாத பல உண்மைகள் உனக்குத் துலங்கும்.

மகனே! இதன் பின்பும் உனக்குச் சந்தேகங்கள் எழுமாயின், அல்லது எழுதியவையில் தெளிவில்லாதிருப்பின் அவற்றை வாயால் கேட்காதே? மனம் என்ற நாவினால் மட்டுமே நீ என்னுடன் பேச வேண்டும்!

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

**நபியே! நீர் அவர்களிடம் வெளியே வரும் வரை அவர்கள் பெறுமையாக இருந்தருப்பார்களாயின், நிச்சயமாக அது அவர்களுக்கு நன்மையாக இருந்திருக்கும். - அல் குர்ஆன்: (49:5)**

நபி ஹிழ்று அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கலீமுள்ளா நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குச் செய்த பின்வரும் உபதேசத்தையும் நீ ஏற்றுக்கொள்.

**“எவ்விஷயத்தைப் பற்றியும் நானே உமக்கு அது பற்றிய விளக்கத்தை அறிவிக்கும் வரை என்னிடம் நீர் (எதுவும்) கேட்கக் கூடாது.” - அல்குர்ஆன்: (18:70)**

நீர் அவசரப்படாதீர்: நேரம் வந்தால் உமக்கு நானே தெரிவிப்பேன் அல்லது காட்டுவேன்.

**அல்லாஹு<sup></sup>த்தஆலா கூறுகின்றான்:**

**அத்தாட்சிகளை உங்களுக்கு நான் காண்பிப்பேன், எனவே, நீங்கள் (அதற்காக) என்னிடம் அவசரப்படவேண்டாம்.**

- அல் குர்ஆன்: (21:37)

உமக்கு நேரம் வர முன் அவசரப்பட்டுக் கேள்விகள் கேட்காதே, இந்தக் கட்டத்திற்கு நீ போய்ச் சேர்ந்து விட்டால், உனக்கு எல்லாம் தெரிய வரும், இந்தக் கட்டத்திற்கு நீர் போய்ச் சேரா விட்டால் அதற்கப்பால் உள்ளவை உனக்குத் தெரிய வராது, அதன் விளக்கங் களையும் உன்னால் புரிய முடியாது என் பதை உறுதியாக நம்பு!

**அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.**

**அவர்கள் பூமியில் பயணம் செய்து சுற்றவில்லையா? (அப்படியாயின்) பார்த்திருப்பார்கள். - அல் குர்ஆன் : (12:109)**

மகனே, உனது மனதைக் கண்ணாடியாக்கினால், விந்தையானதும், அபூர்வமானதுமான காட்சிகளையெல்லாம் உன்னால் காண முடியும்!

நீர் கடக்க வேண்டிய ஒவ்வொரு கட்டத்திலும் உயிரைத் தியாகம் செய்யாதவரை (உனது) நோக்கத்தை அடைய முடியாது.

மாபெரும் தவஞானி துன்னூனுல் மிஸ்ரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் தனது சீடர் ஒருவருக்கு பின்வருமாறு கூறினார்கள்.

**“நமது இந்த (தஸவ்வுப்) வழியில் உன்னால் உயிரைத் தியாகம் செய்யக் கூடிய துணிவு உனக்கிருந்தால் மட்டுமே எமது தரீக்கில் சேர முடியும், சூபியாக்களின் அனுபூதிக் கருத்துக்களைக் கேட்பது இந்த வழியில் செல்வதற்கான அடிப்படைத் தகுதியாகாது”,**

மகனே! முடிவுக்கு வரப் போகின்றேன்,

எட்டு விஷயங்களைக் கூறப் போகின்றேன் அவற்றில் நான்கை நீ செய்யக் கூடாது! மிதி நான்கையும் கண்டிப்பாக நீர் கடைப்பிடிக்க வேண்டும். தவறினால் நீர் கற்ற கல்வி மறுமையில் உனக்கெதிராக வந்து நிற்கும்.

**முதலில் நீர் தவிர்க்க வேண்டிய நான்கையும் கூறுகின்றேன். கவனமாகக் கேள்!**

கேள்விக்கு மேல் கேள்வி கேட்டு குறுக்கீடு செய்வது என்ற நோக்கம் இல்லாதிருப்பதும், பொறாமை, குறைகாணல், பரிசோதித்துப் பார்த்தல் உள்ளிட்ட குறுகிய தீய குணம் இல்லாத மனநோயாளிக்கு மருத்துவம் செய்து சுகப்படுத்த முடியும்! இந்த நோய்க்கு மருத்துவம் செய்து விளக்கம் கொடுப்பது வாஜிபாகும்.



# 4. தவிர்க்க வேண்டியவைகள் நான்கு

## 1) விவாதம் செய்யாதே !

முடிந்த வரை எவரிடமும் எது பற்றியும் விவாதிக்கக் கூடாது விவாதிப்பதில் ஏராளமான ஆபத்துக்கள் இருக்கின்றன.

இதிலிலுள்ள நன்மையை விட தீமையே அதிகம்! பொறாமை, முகஸ்துதி குரோதம், விரோதம், பெருமை உள்ளிட்ட, தீமைகளின் உறைவிடமும் இதுதான்.

உனக்கும், மற்றும் வேறு ஒரு நபருக்குமிடையில் ஏதும் மார்க்கப் பிரச்சினை இருக்குமாயின், உண்மையை விளங்குவது தான் உனது உண்மையான குறிக்கோளாக இருக்குமாயின் நீர் விவாதிக்கலாம், உமது நல்லெண்ணத்தைத் தெரிந்து கொள்வதற்கு இரண்டு அடையாளங்கள் இருக்கின்றன.

உண்மை எத்தரப்பில் இருந்தாலும் உன் நிலையில் மாற்றம் நிகழக் கூடாது! எதிரியின் பக்கம் உண்மை இருந்தாலும் மனப்பூர்வமாக ஏற்க வேண்டு!

விவாதம் பகிரங்க அரங்கில் இல்லாமல் தனிமையாக இருக்க வேண்டும். விவாதம் செய்யும்போது சத்தியம் உன் தரப்பில் தான் உண்டு என்று உனக்கு உறுதியான பின்பும் எதிரி வீண் வம்பு வளர்ப்பதில் நேரத்தைக் கடத்துவாராயின், விவாதத்தைத் தொடரக்கூடாது விவாதம் தொடர்வதில் பயனில்லை! இதற்கு மேல் விவாதம் தொடருமாயின் முடிவு வீண் வம்பில் தான் முடியும்!

உனக்குப் பயன் தரக்கூடிய ஒரு கருத்தைக் கூறுகின்றேன், கவனமாக் கேள்!

சிக்கலான பிரச்சினைகள் பற்றிய கேள்விகள் என்பது மன வியாதிகள் பற்றி மருத்துவரிடம் முன் வைக்கப்படும் கேள்விகளுக்கு நிகராகும்.

மன வியாதிக்கான காரணத்தை மருத்துவரிடமிருந்து எதிர்பார்ப்பது போன்றுதான் இவற்றிற்குப் பதில் கூறுவதும் உள்ளது.

அறிவில்லாத மூடர்களும் ஒரு வகையில் மன நோயாளிகள் தான் என்பதை நன்றாகப் புரிந்து கொள்! அரைகுறையான மருத்துவர்களால் இவர்களுக்கு மருத்துவம் செய்ய முடியாது! அனைத்து வகையான நோய்களுக்கும் திறமையான மருத்துவன் சிகிச்சை செய்ய மாட்டான்!

முதலில் மருத்துவம் செய்ய வழியுண்டா? என்று தீர்க்கமாக பரிசோதனை செய்த பின்புதான் மருத்துவம் செய்வான். முற்றிப்போன நோய்க்கும் மலட்டுத்தனத்திற்கும் அறிவுள்ள மருத்துவன் சிகிச்சை செய்ய மாட்டான்.

இவையிரண்டிலும் மருத்துவம் பயனளிக்காது. இதில் கவனம் செலுத்துவது கால நேர விரயம் என்று தான் தீர்க்கமான மருத்துவன் முடிவு செய்வான்.

## 2) சொற்பொழிவாற்றாதே!

நீர் தவிர்க்க வேண்டிய இரண்டாவது விடயம், சொற்பொழி வாற்றுதல் நல்லுரை (நஸீஹத்து) கூறல் உள்ளிட்டவையிலிருந்து உன்னைத் தவிர்த்துக்கொள்! இதில் அதிகமான ஆபத்துக்கள் இருக்கின்றன. மக்களுக்கு உபதேசம் செய்ய முன் முதலில் அதை முதலில், தான் செயலில் காட்ட வேண்டும்.

**ஹளறத் றூஹுல்லா நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அல்லாஹுத்ததலா பின் வருமாறு வஹி அறிவித்தான்,**

“மர்யமின் மகனே! முதலில் உமக்கு நீரே நல்லுரை பகர்ந்து கொள், உனது நல்லுரையை உனது மனம் ஒப்புக் கொண்ட பின் மக்களுக்கு நல்லுரை பகர் அவ்வாறு இல்லாவிட்டால் என்னில் நின்றும் வெட்கப்படு,”

## 1) சொற்பொழிவில் தவிர்க்க வேண்டியவை

சொற்பொழிவாற்றியே ஆகவேண்டும் என்ற நிர்பந்த நிலை உமக்கு ஏற்பட்டால், இரு விடயங்களைத் தவிர்த்துக் கொள்!

1) கவர்ச்சியாக அடுக்குமொழியில் உரையாற்றுவது சிலேடையான சங்கேதப்பேச்சு' கவிதைகளை மேற்கோள் காட்டி மக்களை தன்பக்கம் கவரும் விதத்தில் பேசுவது, மார்க்க முரணான பேச்சு, போலி சூபிகளின் கட்டுக்கதைகளை எடுத்து கூறும் பேச்சு உள்ளிட்டவையை உனது சொற்பொழிவில் தவிர்க்க வேண்டும்,

2) நடிப்புத்தனமான போலியான விகடமான பேச்சுக்களை அல்லாஹுத்தஆலா வெறுக்கிறான். ஷரீஅத்தின் எல்லை தாண்டிய பேச்சுக்களைப் பேசுவோரின் மனம் அல்லாஹ்வை மறந்துவிட்டது என்பதையும், அவரின் அந்தரங்கம் பாழாகி விட்டது என்பதையுமே மேற்கண்ட பேச்சின் வெளிப்பாடுகள் சுட்டிக்காட்டுகின்றன என்பதை நீ நன்கு புரிந்து கொள்ள வேண்டும்!

## சொற்பொழிவின் நோக்கம்

1. வித்துவம் காட்டும் நோக்கில் சொற்பொழிவாற்றக் கூடாது பின்வரும் விஷயங்களைப் பொதிந்ததாக சொற்பொழிவு அமைதல் வேண்டும்.

1) மறுமையின் அழிவையும் நரக நெருப்பின் பயங்கரத்தையும் விளக்கிக் காட்டவேண்டும்,

2) படைத்தவனுக்குச் செய்யும் கடமையில் உள்ள தனது குறைகளைச் சுட்டிக் காட்ட வேண்டும்

3) தனக்குப் பயனில்லாத விடயங்களில்தான் கழித்த கடந்த காலத்தைப் பற்றிச் சிந்திக்கத் தூண்ட வேண்டும்.

4) தனது இறுதி மூச்சு ஈமானுடன் பிரிய விடாமல் தடுக்கக் கூடியதான தடைகளைப்பற்றிச் சிந்திக்கத் தூண்டக்கூடியதாக இருக்க வேண்டும்

5) கப்றில் விசாரிக்க வருகின்ற முன்கர், நகீர் ஆகிய இரு மலக்குகளும் கேட்கின்ற கேள்விகளை கண்முன் நிறுத்தி அதற்கு எப்படிப் பதில் கூறுவது என்பதை விளக்கிக் கூற வேண்டும்.

6) மஹ்ஷர் மைதானத்தில் தங்கிச் செல்கின்ற ஒவ்வொரு இடங்களிலும் ஏற்படுகின்ற பயங்கரங்களையும் விளக்கிக் கூறல் வேண்டும்,

7) மஹ்ஷர் மைதானத்தில் தனது பட்டோலைகள் பறந்து வந்து வலக்கரம் கிட்டுமா? அல்லது இடக்கரம் கிடைக்குமா? என்ற ஏக்கத்தில் ஏற்படுகின்ற அவதியான அகோர காட்சியை விளக்க வேண்டும்.

8) மறுமையின் பயங்கரமான காட்சிகளை மனதில் பதியும் வண்ணம் படம் பிடித்துக் காட்டி, மக்கள் மனதில் பீதியையும், பயத்தைதையும் தோற்றுவிக்க வேண்டும்.

9) அல்லாஹ்வின் மீதுள்ள அச்சத்தையும், மறுமையின் பயங்கரத்தையும் மனதில் பதியும் வண்ணம் சொற்பொழிவு அமைய வேண்டும்.

10) ஷரீஅத் ரீதியான மக்களின் நடத்தை, குணங்கள் உள்ளிட்டவையிலுள்ள குறைகளை விளக்கிக் கூறவேண்டும்,

11) நல்லமல்கள் செய்யாமல் வீணாகக் கழிந்து போன பயனற்ற நாட்களை நினைத்து அதற்காக வருந்திக் கைசேதப்படக் கூடியதாக சொற்பொழிவு அமையவேண்டும்.

மேற்கண்டவையைத் தொகுத்து விளக்கிக் கூறுவதாக சொற்பொழிவு அமைய வேண்டும். இவ்வாறு அமையும் சொற்பொழிவின் நோக்கம் உண்மையானதாகும்.

பின்வரும் உதாரணத்தைக் கவனமாகக் கேள்!

ஒருவரின் வீட்டுக்குள் திடுதிப்பாக வெள்ளம் புகுந்துள்ளதால், வீட்டின் உரிமையாளரும், அவரின் மனைவி, மக்களும் வெளியேற முடியாமல் தவிப்பார்களாயின், நீ என்ன செய்வாய்? கைகட்டி

வேடிக்கை பார்பீரா? நிச்சயமாக இல்லை. கூச்சல் போட்டு உதவிக்கு மக்களை அழைத்தும் வெள்ளத்தில் சிக்கியவர்களை எச்சரித்தும் அவர்களை காப்பாற்றி வெளியேற்றிட முயலுவாய் அல்லவா!

2. உனது சொற்பொழிவினால் மக்கள் உணர்ச்சிவசப்பட்டு முழக்கமிடுதல், உணர்ச்சிவசப்பட்டு ஆடைகளைக் கிழித்தல், இருக்கக் கூடாது!

உனது பேச்சைக் கேட்கும் மக்கள் ஆஹா! நல்ல பேச்சு! என்று உனது பேச்சைப் பாராட்ட வேண்டும் என்ற எண்ணம் உன் மனதில் இருக்கவே கூடாது. இவ்வாறான எண்ணம் கொண்டு சொற்பொழிவாற்றுவோரின் உள்நோக்கம்.

"உலகத்தின் சுகபோகத்தைத் தன்பக்கம் கவர்வதாகும். அல்லாஹ்வைப் பற்றிய நினைவு சற்றும் இல்லாமல் அவனை மறந்த மனங்களிலிருந்து தான் இப்படியான பேச்சுக்கள் வெளிவரும் அதனால்,

உனது சொற்பொழிவின் நோக்கமும், குறிக்கோளும் உலக மோகத்திலிருந்து மீட்டெடுத்து ஆகிறத்தின் பக்கம் திரும்பக் கூடியதாகவும், பாவத்திலிருந்து வணக்கத்தின் பக்கம் திருப்பக் கூடியதாகவும், பேராசையிலிருந்து பற்றற்ற துறவின் பக்கமாகவும் கஞ்சத்தனத்திலிருந்து ஈகையின் பக்கமும், சந்தேகத்திலிருந்து உறுதியின் (யகீன்) பக்கமும் மதி மயக்கத்திலிருந்து விழிப்புணர்வின் பக்கமும், மருட்சியிலிருந்து தக்வாவின் பக்கமும், மறுமையின் ஆசையையும், உலகத்தின் வெறுப்பையும் ஊட்டக் கூடியதாகவும் இருக்க வேண்டும்!

மேலும், உலகத்தின் மோகத்தினால் ஏற்பட்ட மருட்சியிலிருந்து தக்வாவின் பக்கமும், மறுமை பற்றிய ஆசையைப் பெருக்கி, உலகத்தின் விருப்பத்தைக் குறைக்கக்கூடியதாகவும், வணக்கம், உலகப்பற்று ஆகியவற்றின் குறைகளிலிருந்து விடுதலை பெறக்கூடியதாகவும் சொற்பொழிவுகள் அமைதல் வேண்டும்.

## சீர்திருத்தவாதி செய்ய வேண்டியது யாது?

இக்காலத்தில் மக்களின் கவனமும் இயல்பும் ஷரி அத்தின் கட்டுப்பாட்டை மீறும் வகையில் அமைந்திருக்கின்றன. இதனால் அல்லாஹ் விரும்பாத வழியில் மக்கள் சென்று கொண்டிருக் கின்றனர், இவர்களின் பண்புகள் கெட்டு கீழ்தரமாகிவிட்டது.

இவர்களைச் சீர் செய்ய வேண்டுமாயின், அல்லாஹ்வின் அச்சத்தை இவர்களின் மனதில் பாய்ச்ச வேண்டும், மறுமையில் எதிர்கொள்ள வேண்டிய பயங்கரங்களைக் கூறி அவர்களை எச்சரிக்க வேண்டும், இப்படியான செயல்களால் அவர்களின் மனதில் மாற்றங்கள் வரலாம், இம் மாற்றம் நடத்தையிலும் பிரதி பலிக்கும் இதன் பயனாக வணக்க வழிபாடுகளில் ஆர்வம் ஏற்பட்டு தீய செயல்களில் கவனத்தைத் திருப்பாமல் பாவ காரியங்களில் ஈடுபடாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்வான்,

சொற்பொழிவின் நோக்கமும் இதுதான்! இந்த வகையில் சொற்பொழிவாற்றுபவர்கள் பாராட்டுக்குரியவர்கள்,

மேற்கண்ட முறையைப் பின்பற்றாமல் நிகழ்த்தப்படுகின்ற சொற்பொழிவும், அச்சொற்பொழிவை நிகழ்த்துபவர்களும் குற்றவாளிகளாகவே கருதப்படுவார்கள்.

இப்படியானவர்கள் அல்லாஹ்வின் சோதனைக்குரியவர்கள். தவிர, மனித இனத்திலுள்ள **ஷைத்தான்**களுமாவார்கள் இம் மனித ஷைத்தான்கள் மக்களைத் தவறாக வழிநடாத்தி மக்களை நாசப்படுத்துகின்றனர்.

இப்படியானவர்களின் பேச்சைக் கேட்கக் கூடாது. இவர் களுடன் உறவு வைக்கக் கூடாது. இவர்களை விட்டும் வெகுதூரம் விலகியிருக்க வேண்டியது வாஜிபாகும். இப்படிப்பட்டவர்களின் சொற்பொழிவுகளால் ஏற்படுகின்ற நன்மையைவிட தீமையே அதிகமாகும் இப்படிப்பட்டவர்களால் ஏற்படுகின்ற குழப்பத்தை ஷைத்தான்களாலும் ஏற்படுத்த முடியாது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்,

இப்படிப்பட்டவர்களின் சொற்பொழிவுகளைத் தடுக்க வேண்டிய முழுப்பொறுப்பும் அதிகாரிகளையே சாரும்! இப்படியானவர்களுக்கு சொற்பொழிவாற்ற இடம்கொடுக்கக் கூடாது மீறி சொற்பொழிவாற்றினால் அதிகாரமுள்றவர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்த வேண்டும்! இவ்வாறு செய்வது **"நன்மையை ஏவி தின்மையைத் தடுக்கும் நற்காரியத்தைச் சேர்ந்ததாகும்"**.

## 3) ஆட்சியாளரை விட்டும் விலகியிருத்தல்,

தவிர்க்க வேண்டிய மூன்றாவது விடயம் ஆட்சியாளர்கள், அதிகாரிகளின் உறவிலிருந்து விலகியிருத்தல் வேண்டும். இவர்களைச் சந்தித்தல், சலாம் கூறல் உள்ளிட்டவையைத் தவிர்க்க வேண்டும்.

இவர்களின் சந்திப்பது, இவர்களுக்குச் சலாம் கூறுவது போன்றவையில் மிகப் பெரிய ஆபத்துக்கள் இருக்கின்றன, தவிர்க்க முடியாமல் அவர்களை நீங்கள் சந்தித்தால், அவர்களைப் பராட்டக் கூடாது தீயோர்களையும், அநியாயக்காரர்களையும் பாராட்டுவதை அல்லாஹுத்தஆலா வெறுக்கின்றான்.

ஓர் அநியாயக்காறனுக்க நீண்ட ஆயுள் வேண்டிப் பிரார்த்தனை செய்வதும் இவ்வகையில் சேரும். இவ்வாறு பிரார்திப்பது பூமியில் அவனது அக்கிரமம் நிலைத்திருப்பதை விரும்புவதை எடுத்துக் காட்டும்.

## 4) ஆட்சியாளர்களின் அன்பளிப்புக்களை ஏற்கக் கூடாது.

ஆட்சியாளர்களின் அன்பளிப்புக்களை ஏற்கக் கூடாது. அது சுத்தமான ஹலால் என்று தெரிந்தாலும் சரிதான்! இவ் வன்பளிப்புக்கள் மார்க்கத்தில் குறையையும், குழப்பத்தையும் தோற்றுவிக்கும். இவ்வன்பளிப்புக்களை ஏற்பதனால் அவர்களின் அக்கிமச் செயல்களுக்கு அங்கீகாரம் கொடுப்பதாக அமையும்! அதனால் அவர்கள் உரம் பெறுவார்கள், மார்க்கத்தில் ஏற்படு கின்ற குழப்பங்களுக்கான காரணங்களுள் இவை முக்கியமான

தாகும், ஆட்சியாளர்களின் அன்பளிப்புக்களை ஏற்று, அதன் பயனையும் அனுபவிப்பவர்கள் அவர்கள் பற்றி நல்லெண்ணம் கொள்வார்கள்.

ஒருவரை ஒருவர் நேசித்தால், அவரின் நீண்ட ஆயுளுக் காகப் நிச்சயம் பிரார்த்தனை செய்வர். ஓர் அநியாயக்காரன் நீண்ட காலம் வாழ்ந்தால் அவனுடைய அநியாயமும் கூடவே வாழும்! இதனால் உலகில் குழப்பம் வரும்! குற்றங்கள் அதிகரிக்கும்! இது எவ்வளவு பெரிய கொடுமை! அதனால் எச்சரிக்கின்றேன்! மீண்டும் எச்சரிக்கின்றேன்!! சைத்தானின் சதிவலையில் மாட்டிக் கொள்ளாதே!

ஆட்சியாளர்களின் அன்பளிப்புக்களை நீ பெற்று அதனை ஏழைகளுக்குப் பகிர்ந்தளித்து அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யலாம் என்று ஷைத்தான் உனக்கு உபதேசம் செய்யலாம், ஷைத்தானும், ஷைத்தானின் தோழர்களான மனிதர்களும் கூறுகின்ற ஆலோசனைகளை ஒருபோதும் நீ ஏற்றுக் கொள்ளாதே! இப்படியான அலோசனைகளைக் கூறியே ஷைத்தான் அதிகமான வர்களை வழிகெடுத்துள்ளான். இரத்தத்தை ஒட்டியுள்ளான்.

இதில் ஏராளமான ஆபத்துக்கள் இருக்கின்றன. இவற்றை யெல்லாம் இஹ்யா உலூமுத்தீனில் விளக்கமாக எழுதியுள்ளேன், அதைப்படித்து விளங்கிக் கொள்!



# 5. கடைபிடிக்க வேண்டியவைகள் நான்கு

மகனே! மேற்கண்ட நான்கு விடயங்களிலும் பேணுதலாக இருந்து கொள்! அடுத்து, முக்கியத்துவம் கொடுத்து செயற் படுத்த வேண்டிய நான்கு விடயங்களைக் கூறுகின்றேன் அவற்றை முழுமையாகப் பாதுகாத்து செயற்படுத்திக் கொள்!

## (1) அடிமையின் உறவு

**அடிமையின் உறவு உனக்கும் அல்லாஹ்வுக்கு மிடையிலுள்ள உறவைப் போன்றுதான். உனக்கும் உனது அடிமை (தொழிலாளி) க்கு மிடையிலுள்ள உறவாகும்** என்பதைத் தெரிந்து கொள்!

நீ அல்லாஹ்வோடு நடப்பது போன்றே உனது அடிமையும் உன் விடயத்தில் நடந்து கொண்டால் ஆத்திரப்படாதே! மாறாக சந்தோஷப்படு!

உனது அடிமையிடமிருந்து நீர் எதிர்பார்ப்பதைத்தான் உனது எதார்த்தமான எஜமான அல்லாஹ்வும் உன்னிடம் எதிர்பார்க்கின்றான், உனது அடிமையின் செயலில் நீ திருப்தி காணாதிருப்பது போன்றே உனது எஜமானான அல்லாஹ்வும் உன் செயலில் திருப்தி காணமாட்டான், உனது அடிமை எதார்த்தமான உனது அடிமை இல்லை; அவனைப் பணம் கொடுத்து நீ வாங்கியது மட்டும்தான். ஆனால், நீ படைக்கும் ஆற்றல் உள்ள உண்மையான எஜமானனின் அடிமை! அவன் உன்னை விலை கொடுத்து வாங்கவில்லை, அவன் தான் உன்னைப்படைத்தான் என்பதைத் தெரிந்துகொள்!

## (2) உன் விருப்பம் போன்றே மற்றவர்களுடனும் நடந்து கொள்!

தான் விரும்புவதை மற்றவர்களுக்கும் விரும்பாதவரை உனது ஈமான் பூர்த்தியாகாது,

மகனே! முக்கியமான மற்றுமொரு விஷயத்தையும் உனக்கு நினைவு படுத்துகின்றேன் அதனையும் நினைவில் பதித்து உன் சிந்தனைக்கு எடுத்துக் கொள்! அதன் எதார்த்தத்தை விளங்கி அதன்படி செயல்படு! நிச்சயம் இதில் வெற்றியுண்டு என்று உறுதியாக நம்பு!

அரசர் இன்னும் ஒரு வாரத்திற்குள் உனது இல்லம் வருவதாக இருந்தால், நீ என்ன செய்வாய்! ஏனைய வேலைகளை முழுமையாக ஒதுக்கி வைத்துவிட்டு அவரை வரவேற்பதற்கான வேலைகளில் மும்முரமாக ஈடுபடுவாய்! அதற்காக ஏனைய வேலைகளை ஒதுக்கி வைத்துவிட்டு வீட்டைச் சுத்தம் செய்ய முனைவாய்! வீட்டின் சுவர் திரைச்சீலைகள் விரிப்பு, ஆடை உள்ளிட்ட அனைத்துப் பொருட்களையும் சுத்தம் செய்வாய்! சிலேடையாக இங்கு நான் கூறியதை நீ புரிந்திருப்பாய்! நீ சிறந்த புத்திசாலி. புத்திசாலிக்கு ஒரு வார்த்தை போதும்!

**றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹ¬ அலைஹி வசல்லம் கூறினார்கள்.**

**“அல்லாஹ¬த்தஆலா உங்களின் வெளிக் கோலங்களையோ உங்களின் செல்வங்களையோ, பார்ப்பதில்லை உங்களின் உள்ளத்ததையும், எண்ணத்தையும் உங்களின் செயல்களையுமே பார்க்கின்றான்”,**

உள்ளத்தின் விந்தைகளை மேலும் அறிய அறிய நீ ஆசைப் பட்டால் **“இஹ்யா உலூமுத்தீன்”** உள்ளிட்ட ஏனைய எனது நூற்களைப்படி! மனம் பற்றி அறிவது, அறிந்து கொள்வது எல்லோர் மீதும் கட்டாயக் கடமையாகும்!

இது தவிர்ந்த ஏனைய கல்விகளைக் கற்பது. பர்ளுக் கிபாயாவாகும்! அல்லாஹுத்தஆலா நமக்கு விதித்த கடமைகளை நிறைவேற்றுவதற்கு தேவையான அளவு, பர்ளுக் கிபாயாவைப் பற்றிய அறிவுகளைக் கற்றுக் கொண்டால் போதும்! மனம் பற்றிய அறிவுகளை தெளிவாக நீ கற்றுக் கொள்வதற்கு அல்லாஹுத்த ஆலா உனக்குத் தௌபீக் செய்வானாக! ஆமீன்!

3. **நீ தேடிப் படிக்கின்ற அறிவும், வாசிக்கின்ற நூல்களும் உனது மனதைச் சுத்தம் செய்பவையாக இருக்க வேண்டும்.**

இன்னும் ஒரு வார காலம் தான் நீ உயிர் வாழ்வாய் என்று நீ அறிந்து கொண்டால் நிச்சயமாக பிக்ஹு, சட்டம், அறிவியல்; முறையியல்; தர்க்கவியல் உள்ளிட்ட கலைகளை படிப்பதில் நீர் ஆர்வம் காட்ட மாட்டாய்.!

குறுகிய கால எல்லைக்குள் இக்கலைகளைப்படித்து பயன்பெற மாட்டாய் என்பதை நீ நன்கு அறிவாய்!

அதனால் இக் கலைகளில் ஆர்வம் காட்டாமல் உனது மனப் பண்புகளை சீர் செய்வதிலும் உனது மனதை இறை தியானத்திலும், திக்றிலும் அதிகம் ஈடுபடுவதிலும் உனது கவனத்தை முழுமையாக செலுத்துவாய்.!

உனது மனதில் இருக்கும் தீய பண்புகளை அகற்றி நற்பண்புகளை வளர்ப்பதிலும் மனதில் அல்லாஹ்வின் நேசத்தைப் நிரப்புவதிலும் அதிகம் அதிகம் வணக்கம் புரிவதிலும் அதிக கவனம் செலுத்துவாய்!

மரணம் பகலிலோ, இரவிலோ திடுத்திப்பாக வரக்கூடும் என்று அஞ்சி மக்கள் சந்திப்பை கூட நீ தவிர்ப்பாய்.!

## (4) அதிகமாக பொருள் தேடாதே

உனது குடும்பத்திற்கும், பிள்ளைகளுக்கும் ஒரு வருடத்திற்கு அதிகமான அளவு உலக செல்வத்தைத் தேடாதே! தனது குடும்பத் திற்குத் தேவையான அளவு தான் றஸுல்லாஹிசல்லல்லாஹு

அலைஹி வசல்லம் சேமித்திருந்தார்கள், அதன் பின், முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் தேவையான) அளவைப் போதுமை யாக்கிக் கொள்வாயாக! என்று பிரார்த்தித்தார்கள், றசூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் மனைவிமார்களுள் **"தவக்குல்"** என்ற பண்பில் முதிர்ச்சி இல்லாத மனைவிமார்களுள் சிலருக்கு மட்டுமே ஒரு வருடத்திற்குத் தேவையான உணவுகளைக் சேமித்தார்கள்.

**"தவக்கு"**லில் முதிர்ச்சியடைந்த அன்னை ஆயிஷா றழியல்லாஹு அன்ஹா போன்றவர்களுக்கு ஒரு நாளைக்குத் தேவையான உணவுப் பண்டங்களைக் கூட சேமித்து வைக்க வில்லை,

மகனே இச்சிறு நூலில் உனது கேள்விகள் அனைத்திற்கும் பதில் கூறி விட்டேன், முழுக்க வனத்துடன் அதன்படி செயல்படு! உனது பிரார்த்தனையில் என்னையும் மறக்காமல் சேர்த்துக் கொள்!

இறுதியாக தினமும் ஓதுவதற்கு ஒரு துஆவை எழுதித் தருமாறு கேட்டிருந்தாய் சஹீஹான ஆறு கிரந்தங்களிலும், இன்னும் அஹ்லுல் பைத்துகளிடமும் அதிகமான துஆக்கள் காணக்கிடைக்கின்றன.

இவை எல்லாவற்றிலிருந்தும் ஒரு துஆவைத் தொகுத் துள்ளேன், உனக்கு நேரம் கிடைக்கும் போதும், குறிப்பாக தொழுகைக்குப் பின்பும் ஓதிக் கொள்!

ا اَللّٰهُمّ اِنِّيْ اَسْاَلُكَ مِنْ النِّعْمَةِ تَمَامَهَا وَ مِنَ الْعِصْمَةِ دَوَامَها وَمِنَ الرَّحْمَةِ شُمُوْلَها وَمِنِ العَافِيَةِ حُصُوْلَها وَمِنَ العَيْشِ اَرْغَدَهُ وَ مِنَ الْعُمُرِ اَسْعَدَهُ وَمِنَ الْاِحْسَانِ اَتَمَّهُ

وَمِنَ الْاِنْعَامِ اَعَمَّهُ وَمِنَ الْفَضْلِ اَعْذَبَهُ وَمِنَ اللُّطْفِ اَقْرَبَهُ

اَللّٰهُمَّ كُنْ لَنَا وَلَا تَكُنْ عَلَيْنَا اَللّٰهُمَّ اخْتِمْ بِالسَّعَادَةِ آجَالَنَا وحَقِّقْ بِالزِّيَادَةِ آمَالَنَا وَاَقْرِنْ بِالْعَافِيَةِ غُدُوَّنَا وآصَالَنَا وَاجْعَلْ اِلَي رَحْمَتِكَ مَصِيْرَنَا وَمَآلَنَا وَاصْبُبْ سِجَالَ عَفْوِكَ عَلَي ذُنُوْبِنَا وَمُنَّ عَلَيْنَا بِأِصْلَاحِ عُيُوْبِنَا وَاجْعَلِ التَّقْوَي زَادَنَا وَفِي دِيْنِكَ اجْتِهَادَنَا وَعَلَيْكَ تَوَكُّلَنَا وَاعْتِمَادَنَا

اَللّٰهُمَّ ثَبِّتْنَا عَلَي نَهْجِ الْاِسْتِقَامَةِ واَعِذْنَا فِي الدُّنْيَا مِنْ مُوْجِبَاتِ النَّدَامَةِ يَوْمَ الْقِيَامَةِ وَخَفِّفْ عَنَّا ثِقْلَ الْأَوْزَارِ وَارْزُقْنَا عِيْشَةَ الْأَبْرَارِ وَأَكْفِنَا وَأَصْرِفْ عَنَّا شَرَّ الْاَشْرَارِ وَأَعْتِقْ رِقَابَنَا وَرِقَابَ آبَاءِنَا وَاُمَّهَاتِنَا وَاِخْوَانَنَا وَاَخَوَتِنَا مِنَ النَّارِ بِرَحْمَتِكَ يَاعَزِيْزُ يَاغَفَّارُ يَاكَرِيْمُ يَاسَتَّارُ يَاعَلِيْمُ

يَاجَبَّارُ يَااللّٰهُ يَااللّٰهُ يَااللّٰهُ بِرَحْمَتِكَ يَااَرْحَمَ الرَّاحِمِيْنَ وَيَا اَوَّلَ الاَوَّلِيْنَ يَاآخِرَ الْآخِرِيْنَ و يَا ذَا الْقُوَّةِ الْمَتِيْنِ وَيَا رَاحِمَ الْمَسَاكِيْنَ و يَااَرْحَمَ الرَّاحِمِيْنَ لَا اِلٰهَ اِلَّا اَنْتَ سُبْحَانَكَ اِنِّيْ كُنْتُ مِنَ الظَّالِمِيْنَ

وَصَلَّي اللّٰهُ عَلَي سَيِّدِنَا مُحَمَّدٍ وَاٰلِهِ وَصَحْبِهِ اَجْمَعِيْنَ وَالْحَمْدُلِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

நாயனே! உனது பேரருளில் அதிகமானதையும், பாவத்திலிருந்து பரிசுத்தமாக இருப்பதில் நிரந்தரமான தையும், இடைவிடாத றஹ்மத்தையும், ஆரோக்கியமான சுகவாழ்வு கிட்டுவதையும்,

விசாலமான இரணத்தையும், மகிழ்ச்சியான வாழ்வையும், சீதேவித்தனமான வாழ்வையும், பரிபூரணமான நற்பாக்கியங் களையும், அனைத்தையும் விட அதிகமான பொதுமையான பேரருளையும், மதுரமானதும் பரிபூரணமானதுமான வரிசை யையும், மிக அதிகமான இரக்கத்தையும், எல்லாவற்றிலும் மிகச்சிறந்த நல் அமல்களையும், பயன்மிக்க நல்லறிவையும், மிக விசாலமான இரணத்தையும் உன்னிடம் கேட்கின்றேன்.

நாயனே! எங்களுக்குப் பயனுள்ளவனாக நீ இருப்பாயாக! எங்களுக்குப் பாதகமாக (நஷ்டத்தை ஏற்படுத்தக் கூடியவனாக) இருந்து விடாதே!

எங்கள் முடிவை (ஈமானோடுள்ள) அழகானதாக (நல்ல முடிவாக) ஆக்குவாயாக!

எங்களது அமல்களை சீராக்குவாயாக! எமது காலை வேளையிலும், மாலை வேளைகளிலும் எமக்கு ஆரோக்கியத்தைத் தருவாயாக!

எமது வீடு, எமது செல்வம், குடும்பம் யாவற்றிலும் உனது றஹ்மத்தின் பால் எங்களை ஆக்கி வைப்பாயாக!

எமது பாவங்களிலும் எமது குறைகளிலும் மன்னிப்பெனும் உமது போர்வையால் மறைத்து விடுவாயாக! எமது வடுக்களைச் சீர் செய்து எம்மீது உதவி செய்வாயாக! தக்வாவை மறுமைக்காக நாங்கள் வைத்திருக்கும் கட்டுச் சாதனமாக ஆக்குவாயாக!

எங்களது முயற்சியை உனது மார்க்கத்தில் ஆக்குவாயாக! பரிசுத்தமான உன்னிலேயே எமது நம்பிக்கையையும் தவக்குலையும் ஆக்கிவைப்பாயாக!

இரட்கா! மார்க்கத்தில் உறுதியாக நிலைத்து கால்பதித்து நிற்க வைப்பாயாக!

மறுமையில் அவமானத்தையும், கவலையையும் ஏற்படுத்துவதற்கு காரணமாக இருப்பவையை விட்டும் உனது பாதுகாப்பில் எம்மை வைத்துக் கொள்வாயாக!

எம்மை விட்டும் பாவத்தின் சுமையை இலேசாக்கி வைப்பாயாக! நல்லோரின் நல்வாழ்வை எமக்கு ஈந்தருள்வாயாக!

நீயே எங்களுக்கு எல்லாவற்றிற்கும் போதுமானவனாக இருப்பாயாக! தீயோர், துஷ்டர்களின் தீங்கிலிருந்து எம்மைப் பாதுகாப்பாயாக!

யாஅல்லாஹ்! எங்களது பிடரியையும், எங்களது பெற்றோர், பாட்டன் எங்களது தாய்மார்கள் சகலருடைய பிடரியையும் நரக நெருப்பிலிருந்தும், கடனிலிருந்தும், உரிமை விடுவாயாக! கண்ணியமானவனே! அதிகம் மன்னிப்பவனே! சங்கையானவனே! குறைகளை மறைப்பவனே இரக்கமுள்ளவனே! அதிகம் சினமுள்ளவனே! மகத்தானவனே! அடக்கி ஆள்பவனே!

யாஅல்லாஹ் யாஅல்லாஹ் யாஅல்லாஹ் இவ்வுலகில் எல்லோருக்கும் பாரபட்சமின்றி அருள் பாலிப்பவனே!

மறுமையில் முஃமின்களுக்கு மட்டும் இரக்கம் காட்டுபவனே! கருணாகரனே! உன் அருளைக்கொண்டு கேட்கின்றேன் முந்தியவர்களிலெல்லாம் முந்தியவனே! பிந்தியவர்களில் எல்லாம் பிந்தியவனே! உறுதியான சக்தி மிக்கவனே! ஏழைகளுக்கு இரங்குபவனே! கருணா கரனே!

உன்னைத் தவிர்த்து வேறு நாயனில்லை (சகல குறைகளி லிருந்தும்) உன்னைத்தூய்மைப் படுத்துகின்றேன். நான் அநியாயக்காரர்களில் நின்றும் ஆகிவிட்டேன். (ஆதலால் எம்மைப் பாதுகாப்பாயாக).

யாஅல்லாஹ் படைப்பில் சிரைஷ்டமான எங்கள் தலைவர் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹூ அலைஹி வசல்லமவர்கள் மீதும், அன்னாரின் தோழர்கள், குடும்பத்தார்கள் மற்றும் அனைவரின்மீதும் ஸலவாத்து, ஸலாம் சொரிவாயாக! ஆமீன் யாறப்பல் ஆலமீன்,

அல்லாஹ் வின் கிருபையினாலும் அவனுடைய மேலான தௌபீக்கினாலும் இந் நூல் நிறைவு பெற்றுள்ளது. வல்ஹம்துலில்லாஹி றப்பில் ஆலமீன் ஆமீன்.



# தஸவ்வுப் - ஓர் அறிமுகம்

மௌலவி. பாஸில்.
**ஏ.எல். பதுறுத்தீன்**
காதிரி, ஷர்க்கி, பரேலவி.



# தஸவ்வுப் - ஓர் அறிமுகம்

தஸவ்வுபின் நோக்கம் தோற்றம் பற்றி சமூகவியலின் தந்தை என்று போற்றப்படுகின்ற அறிஞர் இப்னு கல்தூன் பின்வருமாறு கூறுகின்றார்,

இஸ்லாம் தோற்றுவித்த ஷரீஅத் சார்ந்த கலைகளில் தஸவ்வும் ஒன்று. ஸலபுஸ்ஸாலிஹீன்களில் உள்ள சஹாபாக்களில் மிகப் பெரியவர்களும், இவர்களுக்கு பின் வந்த தாபியீன்கள் தபஉத்தாபியீன்கள் அனைவரும் தஸவ்வுபின் அடிப்படை நோக்கம் மக்களை நேரான வழியில் இட்டுச்செல்லும் நேரான வழி என்றே விளங்கியுள்ளனர்.

தஸவ்வுப் பின்வரும் பிரதான நோக்கங்களைக் கொண்டுள்ளது,

1. முழுமையாக தன்னை வணக்கத்தில் ஈடுபடுத்துவது.
2. உலகப்பற்றை முழுமையாக நீக்கிவிட்டு முற்று முழுதாக அல்லாஹ்விடம் சரணடைவது.
3. உலகின் கவர்ச்சிகளை முழமையாகப் புறக்கணிப்பது.
4. மக்கள் அதிகம் விரும்புகின்ற சுவையான உணவு வகைகள், பட்டம், பதவிகள் உள்ளிட்டவையை புறக்கணிப்பது.
5. மக்களை விட்டும் ஒதுங்கியிருந்து வணக்கத்திலீடுபடுவது.

இக் கோட்பாடுகள் யாவும் சஹாபாக்கள், தாபியீன்கள் காலத்தில் பரவலாக காணப்பட்டன, இரண்டாம் நூற்றாண்டிலும்,

அதனையடுத்த காலத்திலும் மக்களின் கவனம் உலகியல் விவகாரங்களில் திரும்பத்தொடங்கியது. இக்காலத்தில் இவர்கள் மக்களுடன் சேர்ந்திருக்காமல் தனித்து வணக்கத்தில் முழுமையாக ஈடுபட்டவர்களை 'சூபிகள்' என்று மக்கள் அழைத்தனர்! (1)

மாபெரும் அறிஞரான இமாம் ஜுர்ஜானி தஸவ்வுப்புக்கு பின்வருமாறு வரைவிலக்கணம் கூறுகின்றார்கள்,

தஸவ்வுபின் அனைத்து வழிகளும் சிறப்பானது, பயனற்ற எதுவும் அதில் இல்லை, இழிவான பண்புகளில் இருந்து மனிதனை பரிசுத்தப்படுத்துகின்றது.

நப்ஸின் விருப்பங்களை ஒடுக்குகின்றது. ஆத்மீக பண்புகளை வளர்ப்பதில் ஏற்படுகின்ற சிக்கல்களை தவிர்க்கின்றது. எதார்த்தமான தூய ஞானங்களுடன் தொடர்பு கொண்டுள்ளது. நிரந்தர பாக்கியம் தரவல்ல செயல்களில் மிக்க சிறப்பானதையே செய்யத் தூண்டுகின்றது.

சமூகத்திற்கு நற்போதனை புரிவது. இக்லாஸுடன் கடமைகளை எதார்த்தமாக நிறைவேற்றுவது, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சுன்னத்தை முழுமையாகப் பின்பற்றுவது உள்ளிட்டவை தஸவ்வுபின் பிரதான கோட்பாடுகளாகும். (2)

மாபெரும் முபஸ்ஸிரும் தத்துவ மேதையுமான இமாம் பக்றுத்தின் ராஸி ரஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

உடலின் இருளான பண்புகளை விட்டும் மனதைப் பரிசுத்தமாக்கிக்கொண்டு இறை சிந்தனையில் தன்னை முற்றிலும் அர்ப்பணித்து செயல்படுகின்றவர்கள் - **"சூபிகள்"** ஆவார்கள். இவர்கள் புறச்செயல்களிலும், அகம் சார்ந்த பகுதிகளிலும் இன்னும் அதன் உள்ளார்ந்த பகுதிகளான சிர்ரு (கபிய்யி, அக்பா) போன்றவற்றிலும் அல்லாஹ் அல்லாத நினைவுகள் வராமல் தங்களை பாதுகாத்து கொள்வார்கள். அல்லாஹ்வுடன் பூரண ஒழுக்கத்தை பேணுவார்கள். மனித இனத்தில் இவர்கள் தான் மிகச்சிறந்தவர்கள், (3)

மாபெரும் சட்ட அறிஞரான இமாம் தாஜுத்தீன் ஸுப்கி ரஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

சூபிகள் உலக இன்பங்களை புறக்கணிப்பவர்கள். நீண்ட நேரம் வணக்கத்தில் ஈடுபடுபவர்கள், சுருங்கக் கூறின் அவர்கள் அல்லாஹ்வின் சொந்த நல்லடியார்கள், இவர்களை நினைவு கூருமிடத்தில் அல்லாஹ்வின் **“ரஹ்மத்”** இறங்கும். இவர்கள் பிராத்தனை செய்து மழையை பொழிவிக்கின்றனர்.

அல்லாஹுத்தஆலா அவர்களையும், அவர்களின் பொருட்டினால் எம்மையும் பொருந்திக்கொள்வானாக. ஆமீன். (4)

தஸவ்வுப்பின் சிறப்புப் பற்றிய அறிஞர்களின் சான்றுகள் ஏராளம் உண்டு; விரிவஞ்சி இத்தோடு சுருக்கிக்கொள்கின்றோம்.

## சொல் பற்றிய விளக்கம்

**“தஸவ்வுப்”** என்ற சொல் எப்படி வந்தது என்பதில் அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களை முன்வைத்த போதிலும், அவை அனைத்தும் ஊகங்களே! **“தூய்மைப்படுத்துவது”** என்பதுதான் இதன் உண்மையான கருதுகோலாகும், சூபிகள் பரிசுத்தத்தில் ஈடுபடு கின்றவர்கள். அதனால் இப்பொருளே இங்கு மிகப் பொருத்தமாகும். (பார்க்க : ரிசாலதுல் குசைரி, கஷ்புல் மஹ்ஜூப்)

தஸவ்வுப்' என்பதும் **“தஸ்கியத்”** என்பதும் ஒரே கருத்துள்ள இரு சொற்கள். **‘தஸ்கியத்’** என்ற சொல் மனப்பரிசுத்தம் என்ற பொருளில் திருக்குர்ஆனில் வந்துள்ளது. தஸவ்வுபின் முழு நோக்கமும் இச்சொல்லில் பொதிந்துள்ளது. ஆக, தஸவ்வுப் என்ற சொல் திருக்குர்ஆனில் இடம் பெறாவிட்டாலும் அதன் நோக்கத்தை வெளிப்படுத்தும் **“தஸ்கியத்”** என்ற சொல் திருக்குர்ஆனில் இடம் பெற்றிருப்பது கூர்ந்து கவனிக்கத்தக்கதாகும்.

நபிமார்கள் 1. வேதங்களை கற்றுக்கொடுத்தல், 2. மக்களை பரிசுத்தப்படுத்தல் என்ற இரு கடமைகளையும் செய்வதற்கே உலகிற்கு அனுப்பப்பட்டுள்ளார்கள்.

மக்களை பரிசுத்தப்படுத்துவது அவர்களின் பணியில் ஒன்று என்பதை பின்வரும் திருவசனங்களின் மூலம் அறிய முடிகின்றது.

**அல்லாஹு⁼த்த ஆலா கூறுகின்றான்:**

“அவன் எத்தகையோன் என்றால் எழுத்தறிவில்லாத அவர்களிலிருந்தே ஒரு ரஸூலை அனுப்பினான், அவர்களுக்கு அவனுடைய திருவசனங்களை ஓதிக்காண்பித்து, அவர்களை பரிசுத்தமாக்கி வேதத்தையும், ஞானத்தையும் அவர்களுக்கு கற்றுக்கொடுப்பார். (5)

“முஃமின்களின் மீது அவர்களில் இருந்தே ஒரு ரஸூலை அவர்கள் மத்தியில் அனுப்பிய நேரத்தில் அல்லாஹ் திட்டமாக அருள் புரிந்துவிட்டான். அவர்களுக்கு அவர்களுடைய திருவசனங்களை அவர் ஓதிக்காண்பித்து இன்னும் அவர்களை (பாவங்களை விட்டும்) பரிசுத்தப்படுத்தி வேதத்தையும், ஞானத்தையும் அவர்களுக்கு கற்றுக்கொடுக்கின்றார். (6)

**மேலும் கூறுகின்றான்:**

(நபியே!) அவர்களுடைய பொருட்களில் இருந்து (பாவப் பரிகாரத்துக்காக ஒரு பகுதியை) தர்மமாக நீர் எடுத்துக்கொண்டு, அதன் மூலம் அவர்களை(ப் பாவங்களை விட்டும்) நீர் தூய்மை யாக்கி வைத்து அவர்களையும் அவர்களின் உள்ளங்களையும்) பரிசுத்தமாக்கி வைத்து அவர்களுக்கு துஆ செய்வீராக! நிச்சயமாக உம்முடைய துஆ அவர்களுக்கு நிம்மதியளிப்பதாகும். அல்லாஹ் (யாவற்றையும்) செவியேற்பவன். முற்றும் அறிந்த.(7)

றஸூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் மனிதனையும், பொருளையும் தூய்மைப்படுத்துகின்றவர்கள் என்பது இத்திருவசனத்தின் மூலம் தெரிகிறது. மனிதனிடம் 04 பொருட்கள் காணப்படுகின்றன.

01. உடல்; 02. மூளை; 03. கல்பு (மனம்); 04. ரூஹ் (ஆத்மா)

**இந்த நான்கையும் முறையே**

1. ஷரீஅத்; 2. தர்க்கத்; 3. ஹக்கீகத்; 4. மஃரிபத் என்ற நான்கினாலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் பரிசுத்தப் படுத்தினார்கள். (8)

## அறிவுத்துறைகளின் தோற்றம்

நபியவர்களின் காலத்தில் இப்போது இருப்பது போன்று ஷரீஅத்தின் அறிவுத்துறைகள் விரிவடைந்திருக்கவில்லை. அப்போது திருக்குர்ஆன் மட்டும்தான் முழுமையாக இருந்தது. திருக்குர்ஆனின் உட்பொருளையும் ஹதீஸின் விளக்கத்தையும் நன்கு தெரிந்தவரை **“காரி”** என்று அழைத்தனர். பின்னர் சட்டப் பிரச்சனையில் தீர்ப்பு கூறுகின்றவர்களை ஃபகீஹ் என்று அழைத்தனர்.

வழிதவறிய கவாரிஜி, கத்ரி, முர்ஜிஆ உள்ளிட்ட கூட்டங்கள் தோன்றி அகீதாவில் புது விளக்கங்களை புகுத்தியபோது அகீதாப் பிரச்சனைகளைப் **“பிக்ஹுல் அக்பர்”** என்றும், சட்டத்துறையை மட்டும் **“பிக்ஹு”** என்றும் அழைத்தனர்.

இமாமுல் அஃலம் அபூஹனீபா, சட்ட மேதை இமாமுனா ஷாபி ரஹ்மஹுமுல்லாஹ் ஆகிய இருவரும் அகீதா பற்றி எழுதிய நூல்கள் **“பிக்ஹுல் அக்பர்”** என்ற பெயரில் இருப்பது கவனிக்கத்தக்கது!

தாபியீன்களின் காலத்தில் முஃதஸிலாக்கள் தோன்றினர். தவறான கொள்கைகளை தர்க்கத்தின் மூலமாக பிரச்சாரம் செய்த போது இத்துறை **“இல்முல் கலாம்”** என்று அறிமுகமாகியது. சட்டத்துறையில் சட்டம் எப்படி வகுக்கவேண்டும் என்ற ஒரு முறையியல் அப்போது இருக்கவில்லை. அதனால் பல்வேறு பிரச்சனைகள் உருவெடுத்தன. இதனை கவனத்திற் கொண்டு இமாமுமான ஷாபியி ரஹ்மதுல்லாஹி அலைஹி **“ரிஸாலா”** என்ற நூலை எழுதி சட்டம் இயற்றும் முறையியலை (உஸூல்)

முன்வைத்தார்கள். இதன் மூலம் **“உஸூலுல் பிக்ஹ்”** என்ற ஒரு துறை உருவானது.

இது போன்று, தப்ஸீர், ஹதீஸ், நாகித் (பகுப்பாய்வு), அஸ்மாவுல் ரிஜால், உலூமுல் குர்ஆன் என்று பல்வேறு கலைகள் தோற்றம் பெற்றன. இவ்வாறுதான் தஸவ்வும் தனித்துறையாக தோன்றி விரிவடைந்தது.

## தஸவ்வுபின் தோற்றம்,

தஸவ்வுபின் தோற்றம் பற்றி உஸ்தாத் இமாம் குஷைரி ரஹ்மதுல்லாஹி அலைஹி பின்வருமாறு விளக்குகின்றார்கள்.

நபியவர்களின் காலத்தில் முஸ்லிம்கள் **“சஹாபா’** என்று அழைக்கப்பட்டார்கள். இதற்குப் பின் தாபியீ, என்றும் அதற்கடுத்து தபஉத்தாபியி என்றும் அழைக்கப்பட்டனர். அக்காலத்தில் இதுதான் அதி உயர் பதவியாகக் காணப்பட்டது.

சஹாபாக்களின் காலத்தில் தன்னை முற்றும் முழுதாக வணக்கத்தில் ஈடுபட்டவர்களை **“ஸுஹ்ஹாத்”** என்று அழைத்தனர். பின்னர் வழிகெட்ட இயக்கங்கள் தோன்றின. இக்கொள்கைகளைப் பின்பற்றுவோரிலும் வணக்கவாளிகள் தோன்றினர். இவர்களையும் **‘ஸுஹ்ஹாத்’’** (துறவிகள்) என்றே அழைத்தனர்.

இவர்களில் இருந்து தங்களை வேறுபடுத்திக் கொள்வதற்காக அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் தங்களது ஆத்மீக போதனையை **‘‘தஸவ்வுப்’’** என்றும், அதில் ஈடுபடுவோரை **‘‘சூபிகள்’’** என்றும் அழைத்தனர். (9)

## தஸவ்வுப் தனித்துறையாகுதல்

தஸவ்வுபை தனித்துறையாக்கி முதன் முதலில் போதித்தவர் இமாம் ஹசனுல் பஷரி ரஹ்மதுல்லாஹி அலைஹி ஆவர்கள். இவ்வறிவை ஹழ்ரத் அமீருல் முஃமினீன் அலி ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களிடம் கற்றார்கள்.

அக்காலத்தில் நிலவிய அரசியல் சூழ் நிலைகள் காரண மாகவும், ஹஜ்ஜாஜின் கொடுமைகள் காரணமாகவும் ஹழ்ரத் அலி ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் பெயரை தவிர்த்து வந்தார்கள்.

ஹஸ்ரத் ஹஸனுல் பஷரி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் தஸவ்வுப் விளக்கம் சஹாபாக்களை வியப்பில் ஆழ்த்தியது.

ரஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அவர் களிடம் நாங்கள் கேட்காத புது விளக்கங்களை உங்களிடம் கேட்கின்றோம். யாரிடமிருந்து இதனை கற்றீர்கள்? என்று கேட்டதற்கு ஹஸ்ரத் ஹுதைபா ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களிடம் இருந்து கற்றேன் என பதில் கூறினார்கள்.

ஹஸ்ரத் ஹுதைபா ரழியல்லாஹு தஆலா அன்ஹுவை சந்தித்து நீங்கள் யாரிடமிருந்து கற்றீர்கள் என்று கேட்க ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களிட மிருந்து என பதில் கூறினார்கள். (10)

## அஹ்லுஸ் ஸுப்பாஹ்

நபியவர்களின் காலத்தில் அறிவை தேடுவதிலும், முழுமை யாக அல்லாஹ்வின் திருப்தியை நாடி வணக்கத்தில் ஈடுபட்ட ஒரு கூட்டம் மஸ்ஜிதுந்நபவியில் இருந்தது.

இவர்கள் **"அஹ்லுஸ் ஸுப்பாஹ்"** என்று அழைக்கப் பட்டனர். (11)

பின்வரும் திருவசனம் இவர்கள் விடயத்தில் இறங்கியது.

**"(நபியே!) காலையிலும், மாலையிலும் தங்களின் றப்பை (பிராத்தனை செய்து அழைத்துக்கொண்டும், அவனுடைய திருச்சமூகத்தை நாடியவர்களாகவும் இருப்பவர்களுடன் உம்மை நீர் பொறுமையுடன் கட்டுப்படுத்திக்கொள்வீராக". 18/28**

இத்திருவசனம் அஹ்லுஸ் ஸுப்பாக்கள் விசயத்தில் இறங்கியது என்றும், அப்போது மஸ்ஜிதுன் நபவியில் 700 சஹாபாக்கள் தங்கியிருந்தனர் என்றும், ஹஸ்ரத் கதாதா ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் குறிப்பிடுகின்றார்கள், (13)

தஸவ்வுப் போதனை நபியவர்களால் இவர்களுக்கு போதிக்கப்பட்டுள்ளது என்பதும், அப்போதனைக்கு செயல் வடிவம் கொடுத்த ஒரு திருக்கூட்டம் நபியவர்களின் பயிற்சிப்பாசறையில் வளர்த்தெடுக்கப்பட்டது என்பதும் இதிலிருந்து தெளிவாகின்றது.

## தஸவ்வுப் அகமாகுதல்

அமீருல் முஃமினீன் ஹஸ்ரத் அலீ இப்னு அபீதாலிப் ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் மறைவிற்கு பின் அரசியலும் தஸவ்வுபும் தனித்தனியாகிவிட்டன.

ஹஸ்ரத் முஆவியா ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் தலைமையில் அரசியலும், ஹஸ்ரத் ஹஸன் ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் தலைமையில் ஆத்மீகமும் செயல்பட்டு வந்தன.

**ஹஸ்ரத் ஹஸன் ரழியல்லாஹு தஆலா அன்ஹு. ஹஸ்ரத் முஆவியா ரழியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களுக்கு** அரசியலை விட்டுக்கொடுத்ததினால் அதைவிட சிறந்த ஆத்மீக ஆட்சியை அல்லாஹ் ஹஸ்ரத் ஹஸன் ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுக்கு வழங்கினான். இதனால் நபியவர்களுக்கு பின் இவர்களே முதல் **“குத்பாக”** விளங்குகின்றார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் திருக்குடும்பத்தின்மீதும், அவர்களை அன்பு வைத்து நேசிப்பவர்களின் மீதும் அரசியலின் கழுகுப் பார்வை படிந்திருந்த தினால் இவர்களின் போதனையும், உறவும் மிக இரகசியமாகவே இருந்து வந்தது. அதனால் பை அத், கிலாபத் என்பதையெல்லாம் கிர்க்கா (ஒரு துணி) அணிவிப்பதன் மூலம் செய்து வந்தனர்.

அரசியலை விட்டும் இவர்கள் ஒதுங்கியிருந்தாலும் அரசியலோடு ஒட்டி உறவாடி சுகம் பெற்று வந்த சட்ட அறிஞர்கள் உள்ளிட்ட வேறு அறிஞர்களின் பகையும் வெறுப்பும் இவர்கள் மீது இருந்து வந்தது.

அதனால் தங்களை அடக்கி வாழ வேண்டிய நிலையில் இவர்கள் இருந்தனர்.

இமாம் ஹுஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி பிக்ஹுக்கும் தஸவ்வுப்புக்கும் இடையில் இருந்த இடைவெளியை நீக்கி தஸவ்வுப்பை எளிய உதாரணங்கள், அறிவியல் விளக்கங்கள் மூலம் விஞ்ஞான மயப்படுத்தினார்கள்.

இவ்வாறு கிரேக்க தத்துவத்தை முஸ்லிம்களில் இருந்து துடைத்தெறிந்து தஸவ்வுபை திருக் குர்ஆன், ஹதீஸ், ஸலபுஸ் ஸாலிஹீன்களின் சான்றுகள் மூலம் நிறுவி தஸவ்வுபை உயர் தத்துவமாக உலகத்திற்கு முன்னால் வைத்தார்கள். (பார்க்க : அல் முன்கிதும் மினல்ழலால்)

தஸவ்வுபிற்கு உயிரோட்டம் கொடுத்தும் அதற்கு இலக்கணம் வகுத்தும் அங்கீகாரம் எடுத்துக்கொடுத்தவர்களுள்.

**இமாம் அப்துல்கரீம் அல் குஷைரி,**

**இமாம் அபூதாலிப் அல் மக்கீ,**

**இமாம் ஜுனைதுல் பக்தாதி,**

**இமாம் முஹாஷிபி,**

**இமாம் அஜ்ஹுரி**

ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாகும்.

## தீன் என்றால் என்ன?

"தீன் (மார்க்கம்) என்பது

1. ஈமான்,
2. இஸ்லாம்,
3. இஹ்ஸான் ஆகிய மூன்றும் சேர்ந்ததுக்கு கூறப்படும்.

ஈமான் என்பது நம்பிக்கை சார்ந்த கோட்பாடுகள் பற்றியும், இஸ்லாம் புறக்கடமைகள், விலக்கல்கள் பற்றியும்,

இஹ்ஸான் மனம் சார்ந்த பண்புகள், இறையச்சம், நல்லது, தீயது பற்றியும் சிந்திக்கின்றது.

குறிப்பாக இம்மை மறுமையின் வெற்றியில் முழுக்கவனம் செலுத்துவது இஹ்ஸான் என்ற பகுதியாகும். இஹ்ஸானின் மறுபெயர்தான் தஸவ்வுப்.

**"இஹ்ஸான்"** என்றால் என்ன? என்ற கேள்விக்கு **''நீர் அல்லாஹ்வை பார்த்து வணங்க வேண்டும், அன்றேல் உன்னை அல்லாஹ் பார்க்கிறான் என்று உணர்ந்து வணங்க வேண்டும்''** என்று றஸூல் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பதில் கூறினார்கள்.

இறைவனின் நினைவை மனதில் விதையாக்கி, இறையச் சத்தால் நீர் பாய்ச்சி, இறை தரிசனத்தைப் பெறுவதுதான் தஸவ்வுபின் குறிக்கோளாகும்.

## சுலூக் என்றால் என்ன?

புறக்கிரிகைகளை **"இபாதத்"** என்றும், அகவியல் குணங்களை சீர் செய்வதை **"சுலூக்"** என்றும் குறிப்பிடுவர்.

குணங்கள், கிரிகைகள், மஹ்ரிபாக்களை செம்மைப்படுத்தல், அக புற குணங்களை சீர் செய்து மனதை தூய்மைப்படுத்தல் தன்னையறிந்து தனது றப்பை அறிவதற்கான தகுதியை பெறுதல் இம்மூன்று குறிக்கோள்களையும் நிறைவு செய்வது **"சுலூக்"** ஆகும். என்று ஹஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள். (14)

மனிதன் அல்லாஹ்வை அறிவதற்காகவே படைக்கப்பட்டான். அல்லாஹ்வை அறிவதற்கு வணக்கம் முக்கிய காரணமாகும். இபாதத் இன்றி அல்லாஹ்வை அறிய முடியாது. அதனால் இபாதத் இரு வகைப்படும்.

## 01. புறம் சார்ந்த வணக்கம் இதன் முழுமை - தக்வா,

தக்வா இருவகைப்படும்

**01. புறப்பகுதி இதன் பலன் - சுவர்க்கம்.**

**02. அகம் சார்ந்த பகுதி இதனை "தரீக்கா" என்று கூறுவர்.**

இதன் மூலம் ஹக்கீகத், மஃரிபா, அஷ்ரார் (இரகசியங்கள்), ஹகாயிக் (எதார்த்தங்கள்), தகாயிக் (நுட்பங்கள்) வெளிப்படும். இதன் பலன் இறை தரிசனம். (15)

## சூபிகளின் குறிக்கோள்,

அல்லாஹ்வின் தாத்தில் தன்னை அழித்துக் கொள்வதுதான் தஸவ்வுபின் குறிக்கோளாகும்.

இதைத்தான் கமாலியத் - சம்பூரணம் என்று கூறுவர்.

ஆரம்பித்த இடத்தை தொடுவதுதான் சாயுச்சியம் என்று சூபிகளின் நாயகர் ஜுனைதுல் பக்தாதி ரஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள். (16)

## தனஸ்ஸுலாத்

அல்லாஹ்வின் திருச்சன்னிதானம் அடைவதை **"உறூஜ்"** என்பர். அல்லாஹ்வின் தாத்தைப்பற்றியும், அதன் வெளிப் பாடுகள் பற்றியும் சூபிகள் அதிகமாக கூறுகின்றனர். அல்லாஹ்வின் அறிவிலிருந்து கீழ் நோக்கி நாம் வந்த வழியை **'தனஸ்ஸுலாத்'** என்று கூறுகின்றனர்.

தனஸ்ஸுலாத்தை பின்வருமாறு வரிசைப்படுத்துகின்றனர்,

01. தாத்துல் பஹ்து (அமா, ஹுவிய்யத், அன்னியத், சிர்புல்மௌஜூத், மஸ்கூத் அன்ஹு , அகதியத்)

02. வஹதத் (ஹக்கீகத்துல் முஹம்மதியா, நூரே முஹம்மதியா, காப கௌசைன்)

03. வாஹிதியத் (ஹக்கீகத்தே இன்ஸான், ஹக்கீகத்தே ஆதம்)

04. ஆலம் அர்வாஹ் (ஆன்ம உலகம்)

05. ஆலம் மிதால் (சூக்கும உலகம், கற்பனை உலகம்)

06. ஆலம் அஜ்சாம் (சட உலகம்)

07. ஆலம் இன்சான் (சம்பூரண மனிதன், இன்சான் காமில்)

மஸ்தான் சாஹீப் வலியுல்லாஹ்வின் பாடல்களின் ஆரம்பமே இவ்வாறுதான் ஆரம்பிக்கின்றது.

**மஹ்ழியத் தான தாத்துல் கிபுரி யாவில்**
**மறைந்த கன்சுல்மகுபியாம்**
**மஸ்கூத்து அன்குல் கதீமுல் அமாவான**
**மவூஜூ தெனுஞ் சிறுபிலே (17)**

படைப்பை வெளியாக்க முன் அல்லாஹ் தனியாக இருந்தான். பின்னர் வஹதத் என்ற தொகுப்பு நிலையில் படைப்புகளை அறிந்தான். அதன் பின் வாஹிதிய்யத்தில் வகுப்பாக அறிந்தான். அதில் அவன் நாடியதை வெளிப்படுத்தினான்.

அது உணர்வு பெற்று தன்னை தனிப்பொருளாக தெரிந்து கொண்டது இப்போது இறைவனின் **''தாத்''**, அடியானின் **''தாத்''** என்று இரு **''தாத்துகள்''** வந்துவிட்டன.

படைப்பின் **''தாத்து''** நிலையற்றதும் இழிவானதுமாகும். அல்லாஹ்வின் தாத் பெருமையும், கண்ணியமும் நிறைந்ததாகும், அதனால் அல்லாஹ்வின் தாத்தை **"தாத்துல் கிப்ரியாஹ்"** என்றும், அல்லாஹ்வின் தாத்தை எவராலும் அறிய முடியாது என்பதனாலும், அதுபற்றி எதுவும் கூற முடியாது என்பதாலும், அகதியத்தின் நிலையை **''கன்சுல் மக்பியா', ''மஸ்கூத்து அன்ஹு''** என்றும் மேற்படி பாசுரத்தில் கூறப்பட்டுள்ளது.

அகதியத்தின் நிலையில் அல்லாஹ்வின் பண்புகளோ படைப்பின் பண்புகளோ வெளியாகாதிருந்ததினால் அல்லாஹ்வின் தாத் பரிசுத்தமாக இருந்தது. இதனை **"சராபத்"** தூய்மை என்று கூறுவர். அல்லாஹ்வின் தாத் தூய்மையாகவும் பூர்வீகமாகவும் மவ்ஜூதாக இருந்தது என்பதை மேற்படி பாசுரம் விளக்குகின்றது. (விளக்கம் பார்க்க : இன்சான் காமில்) பின்னர்,

**அகதியத் துகதாதி வாகிதிய் யத்தான**
**ஆலம் அறு வாகா னதில்**
**ஆலம் மிதாலாகி ஆலம் அஜ்சாமான**
**ஆலம் இன்சானா னபின் (18)**

என்று மஸ்தான் ஸாஹிப் வலியுல்லாஹ் கூறுகின்றார்கள். இதனை இலங்கை அட்டாளைச்சேனை அல் ஆரிபு பில்லாஹ் அஹ்மத் மீரான் சூபி (வெள்ளி ஆலிம் - (இவர்கள் ஹைதராபாத் ஞான வள்ளல் முஹம்மத் அப்துல் காதிர் ஸூபி அவர்களின் கலீபாவும் மணமங்கல மாலை தந்த ஆலிம் புலவர் அப்துர்ரஹ்மான் ஆலிம் அவர்களின் மருமகனார் என்பதும் குறிப்பிடத்தக்கது.) இப்படி கூறுகின்றார்கள்,

**அஹதிய் தென்ற அடங்காப் பொருள் நீயே**
**வஹ்தத் என்று தொகுப்பொடு நின்றாயே!**
**வாஹிதிய்யெத்தென்று வகுப்புட நின்றாயே**
**ஆலம் அறுவாஹினில் ஜோதியா னின்றாயே**
**ஆலம் மிதாலில் கோலமுமானேயே (19)**

**ஆலம் அஜ்ஸாமில் அடங்கி மறைந்தாயே**
**ஆலம் இன்சானில் ஜாமிஉ மானாயே**
**சித்தர்கள் தேடிய திரவியமு நீயே! (20)**

## தன்ஸீஹ், தஷ்பீஹ்

ரூஹூ அல்லாஹ்வின் அறிவிலிருந்து வெளி வருமுன் அல்லாஹ்வின் தாத் மட்டும் தான் இருந்தது.

ரூஹூ தனியாக வெளிவந்த பின் அல்லாஹ்வின் தாத், ரூஹின் தாத் என்று இரண்டு தாத்துக்கள் வந்து விட்டன.

அல்லாஹ்வின் பண்புகள், திருநாமங்களின் வெளிப்பாடாக ரூஹூ இருப்பதனால் அல்லாஹ்வின் பண்புகளையும், திருநாமங்களையும் இரவலாக ரூஹூ பெற்று, தன்னை இறைவனுக்கு ஒப்பானதுபோல் ஆகிவிட்டது.

இங்கு அல்லாஹ்வின் வுஜூத் கோலங்களுக்குள் மறைந்துள்ளது. இதனை "**தஷ்பீஹ்**" என்றும், கோலங்கள் மறைந்து அல்லாஹ்வின் வுஜூதை மட்டும் பார்ப்பதை தன்ஸீஹூ என்றும் கூறுவர்.

அதாவது, அல்லாஹ்வின் பண்பான ழாகிர் என்பதை **"தஷ்பீஹ்"** என்றும் பாதின் என்பதை **"தன்ஸீஹ்"** என்றும் கூறுவர்.

## வேற்றுமையின் ஆரம்பம்

தன்னை ஒரு தனிப்பொருளாகவும், தான் இறைவனுக்கு வேறாக இருப்பதாகவும், கருதுகின்ற எண்ணம்தான் அடியானுக்கும் அல்லாஹ்வுக்கும் இடையில் உள்ள திரையாகும். இங்குதான் வேற்றுமை தொடங்குகிறது.

அட்டாளைச்சேனை அஹ்மத் மீரான் சூபி கூறுகின்றார்கள்,

**நானென்றும் வேறென்றும் நாடி யிருப்பவர்க்கு**
**தூராதி தூரமு மனாய் தூயோனே நீயும்,**
**மீண்டும் கூறுகின்றார்கள்**
**ஆரிபான அபூயஸி தவர்க்கே**
**ஆதியும் வாக்களித்தானே**
**நீ என்ற நபுஸை நீக்கிய பின்னே**
**நேரில் வாருமென்றானே (21)**

## முழுக்கென்றால் என்ன?

முழுக்கு என்பது ஷரீஅத்தின் கடமைகளை தடுக்கின்ற தீட்டாகும். ஆனால் சூபியாக்களிடத்தில் அல்லாஹ்வின் திருச்சன்னிதானம் செல்வதை தடுக்கின்ற "நான்" என்ற தன்னுணர்ச்சியாகும்.

அல் ஆரிபுபில்லாஹ் அஹ்மத் மீரான் சூபி கூறுகின்றார்கள்,

**லா மவ்ஜூதெ இல்லல்லாஹூ வென்றிருப் போமா**
**என்றிருப்போமா**
**தினம் நானென்ற பெருந்துடக்கை பூண்டிருப்போமா**
**பூண்டிருப் போமா அதை பூண்டறுப்போமா (22)**

## தரீக்கத்தின் வகைகள்

அல்லாஹ் கூறுகின்றான் ,

**“எவர் தம் றப்பை சந்திப்பதை ஆதரவு வைக்கின்றாரோ அவர் நற்செயல்கள் செய்து கொள்ளட்டும்”.**

அல்லாஹ்வின் பால் செல்லுகின்ற ஆத்மீகப்பாதை மூன்றாகும்.

### 01. தரீக்கத்துஸ் சாலிஹீன்

அதிகமான வணக்கங்களினால் நப்ஸுக்கு சுமையேற்றி அதைவழிப்படுத்துவது

### 02. தரீக்கத்துஸ் ஷாஹிதீன்

நப்ஸுக்கு மாறு செய்து, வதை கொடுத்து அதை அடக்குவது

### 03. தரீக்கத்துல் ஆரிபீன்

ரூஹின் அடிப்படை இயல்பு அல்லாஹ்வை விரும்புகின்றது. அதனால் அல்லாஹ்வின் மீதுள்ள காதல் தீயை மனதில் மூட்டி அதில் ரூஹின் இரசைனியலை தூண்டி அதனை வழிப்படுத்துவது. (23)

## சுருக்கமான வழி

குதுபுல் அக்தாப் முஹ்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹுசிர்ரஹுல் அஸீஸ் கூறுகின்றார்கள்,

அமல்களில் மிகவும் மேலானது நப்ஸுக்கும், மனோ இச்சைக்கும் (ஹவா) மாறு செய்வதும் அல்லாஹ்வை நேசித்து அவனை முன்னோக்குவதுமாகும். (24)

குதுபுல் அஸ்கர் அபுல்ஹஸன் ஷாதுலி கத்தஸல்லாஹுஸிர்ரஹுல் அஸீஸ் கூறுகின்றார்கள்,

அல்லாஹ்வை நேசித்தல், மனோ இச்சைக்கு மாறு செய்தல் என்ற ஒரே வழிபாட்டைக் கடைப்பிடியுங்கள்.

ஷாஹ்பஹாவுத்தீன் நக்ஷபந்தி கத்தஸல்லாஹுஸிர்ரஹுல் அஸிஸ் கூறுகின்றார்கள்,

தொழுகை, நோன்பு, மனப்போராட்டம் (முஜாகதா) உள்ளிட்ட யாவும் அல்லாஹ்வை சென்றடையும் வழிகள்தான்! ஆயினும், தனது நப்ஸை அழித்து தன்னை **“பனா”** ஆக்குவதுதான் எங்களிடத்தில் மிகவும் நெருக்கமான வழியாகும். அமல்கள் யாவும் செய்து முடிவில் நப்ஸை அழித்தே அல்லாஹ்வின் சமூகம் செல்ல வேண்டும். (அதனை நாம் ஆரம்பத்திலே செய்து கொள்கிறோம்) (25)

## இறைவழி செல்லும் ஒழுக்கங்கள்

தரீக்காவின் முழுப்போதனையும் ஒழுக்கத்தை பற்றியதாகவே உள்ளது. ஒருவரின் ஒழுக்கத்திற்கு தக்கவாறு அல்லாஹ்தஜல்லி யாவான். அதனால் தரீக்கின் ஒழுக்கங்கள் மூன்று வகைப்படும்.

01. **ஷரீஅத்தின் ஒழுக்கங்கள்**

02. **தரீக்கத்தின் ஒழுக்கங்கள்**

03. **ஹக்கீகத்தின் ஒழுக்கங்கள்**

ஷரீஅத்தின் ஒழுக்கம் என்பது கடமைகளை பேணுவதும் விலக்கல்களை தவிர்ப்பதுமாகும்.

தரீக்கத்தின் ஒழுக்கம் என்பது அல்லாஹ்வின் அருட் கொடைகளை சுஹூது செய்வது (காட்சி காண்பது)

ஹக்கீகத்தின் ஒழுக்கம் என்பது தனக்குரியதையும் அல்லாஹ்வுக்குரியதையும் அறிவது.

தனக்குரியது, உபூதிய்யத் (அடிமைத்துவம்) இதன் பண்புகள் நான்கு,

01. வெறுமை (பக்ரு), 02. இயலாமை,

03. பலஹீனம், 04. இழிவு

## றப்புக்குரிய ருபூபிய்யத்தின் பண்புகள் நான்கு,

01. தேவையற்றல், 02. பலம்,

03. சக்தி, 04. கண்ணியம்

## தன்னை அறிதல்

தனது உபூதிய்யத்தின் பண்புகளை ஹக்குல்யகீனாக கண்காட்சியாக கண்டவர் ருபூபிய்யத்தின் பண்புகளை அறிந்து கொள்வார். இதைத்தான் **“தன்னையறிந்தவன் தன் றப்பை அறிந்தான்”** என்ற ஹதீஸின் பொருள் நோக்கப்படுகின்றது. (26)

## தரீக் வழியின் உச்சம்

தன்னை அறிவதுதான் தரீக் வழியின் உச்சமாகும். தன்னை அறிவதென்றால் தனது உடலை அறிவதல்ல, உடலுறுப்புக்கள் அரபு எழுத்தின் எந்த வடிவம் எங்கே இருக்கின்றது என்று தேடுவது கருத்தாகாது.

சிலர் இவ்வாறு நினைத்து காலத்தையும், நேரத்தையும் வீணில் கழித்து ஏமாந்து போகின்றனர்.

இதனை அஹ்மத் மீரான் சூபி அவர்கள் கூறுகின்றார்கள்,

**தன்னை அறிவதென்றால் தசை தோல் எலும்பதை**
**அறிவது இல்லை எனவே**
**உன்னை ஆட்டி அடங்கிடும் ஆத்மாவின் ஸிர்ரை**
**அறிந்து தெளிவதென்றாடு மயிலே!**
**புகழ்ந்தாடு மயிலே உணர்ந்தாடுமயிலே! (27)**

## நப்ஸின் வகைகள்

அல்லாஹ்வின் தாத்தில் இருந்து வெளிப்பட்ட நாம், மீண்டும் அங்கே செல்ல வேண்டும்! இதில் போக்குவரத்து செய்வது ரூஹு மட்டும் தான். உடலின் இழிவான தன்மைகளை

ரூஹூ ஏற்றுக்கொண்டதனால் அதன் பெயரை நப்ஸ் என்று மாற்றிக்கொண்டு இருளடைந்துவிட்டது. உடலின் நெருப்பின் குணத்தினால் **"அம்மாரா"** என்ற பெயரைப் பெற்றது. இது முற்றிலும் இருளான பண்புகளை கொண்டது.

ஷரீஅத்தின் கடமைகளை எல்லை தாண்டாமல் செய்து கொண்டு அதிகம் அதிகமாக திக்ரும் செய்து வந்தால், அம்மாறாவின் இருள் விலகும், அப்போது சட உலகின் திரையும் நீங்கும். பின்னர் ஒளியிலான உலகமாகிய சூக்கும உலகம் வெளிப்படும். இங்கு பயணம் செய்யும் நப்ஸுக்கு **"லவ்வாமா"** என்று பெயர்.

இது உடலின் காற்றின் செல்வாக்கினால் இப்பெயரால் அழைக்கப்படுகிறது.

**''சைத்தான்''** நெருப்பால் படைக்கப்பட்டவன். அதனால் தான் "நப்ஸ் அம்மாறாவில் அவன் செல்வாக்கு அதிகம் காணப்படுகின்றது.

**''நப்ஸ் லவ்வாமா'**வில் நப்ஸ் அம்மாறாவின் எச்சம் சில காணப்படும். அதனால், சைத்தானின் ஊடுறுவல் அதிகம் இருக்கும், ஷரீஅத்தின் கடமைகளை ஒழுக்கத்துடன் பேணி அம்மாறாவின் குணமான தன்முனைப்பு மறைவான முகஸ்துதி உள்ளிட்ட தீய பண்புகளையும் அழித்து முன்னேற வேண்டும்.

இவ்வழியில் செல்பவர் ஷைய்கின் துணையில்லாமல் செல்வது ஆபத்தானது! காரணம் இது பர்சகின் பயணமாகும்.

உடலின் நீரின் தன்மையை எடுத்துக்கொண்ட றூகை நப்ஸை **''முல்ஹிமா''** என்று கூறப்படும். இவருக்கு இரகசியங்கள் வெளியாகும்.

**''ஜபரூத்''** என்ற ஆன்ம உலகத்தில் இவர் பயணம் செய்வதனால், அல்லாஹ் அல்லாத அனைத்து நினைப்புகளில் இருந்தும் **''பனா'**வாகியிருப்பார்.

அல்லாஹ்வின் காதல் இவரின் மனதில் பெருகும். நற்பண்புகள் இவரில் வெளியாகும். ஆயினும் மலக்கின் உதிப்பையும், சைத்தானின் உதிப்பையும், வேறுபடுத்தி பார்க்கும் திறன் இவருக்கு குறைவாக இருப்பதனால், எச்சரிக்கையோடு இங்கு நடந்து கொள்ளவேண்டும்.

ஷரீஅத்தின் கடைமைகள், ஒழுக்கங்கள், உள்ளிட்டவையை மிகப் பேணுதலாக கடைப்பிடிப்பவர் மட்டுமே சைத்தானின் தீங்கில் இருந்து இங்கு தப்ப முடியும்.

அதனால் இங்கு காணுகின்ற காட்சிகளைக்கண்டு ஏமாறாமல் முன்னேறவேண்டும். இங்குதான் **"நான்"** என்ற தன்னுணர்ச்சி இவரிலிருந்து முழுமையாக விலகி உலகத்தையும் தன்னையும் மறந்து பனாவாகி நிற்பார் இவருக்கு எல்லாம் அல்லாஹ்வின் வுஜூதாகவே காட்சி தரும்.

இமாம் மன்ஸூர் ஹல்லாஜ் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் மகாம். இது என்று கூறப்படுகிறது.

(பார்க்க : அல் – ஹகீக்கா) (28)

இந்த நிலைக்கு சென்றவரில் அல்லாஹ்வின் பண்புகள், திருநாமங்கள் வெளியாகும். பின்னர், அவரிடமிருந்த குறை பாடுள்ள றூஹூக்குப் பதிலாக ரூஹுல் குத்சியின்மூலம் மீண்டும் உயிர்பெற்று தெளிவோடு மக்களிடம் வருவார்.

இவரைத்தான் இன்சான் காமில், **"அஸ் ஷைகுல் காமில்"** என்று கூறப்படும்.

இவர் நெருப்பில் பழுக்கேறிய இரும்பை போன்றும் மனித கோலத்தில் மலக்கைப் போன்றும் இருப்பார்.

இவருடைய புலன்கள் செயல்பாடுகள் யாவும் அல்லாஹ்வின் ரூஹுல் குத்ஸியைக் கொண்டே இயங்கும்.

இதைத்தான் "என்னைக் கொண்டு பார்ப்பார்! என்னைக் கொண்டு கேட்பார்! என்னைக் கொண்டு கரம் விரிப்பார்! என்னைக் கொண்டு நடப்பார்! என்றும்,

**"எனது வொலிக்கு நோவினை செய்பவன் என்னோடு யுத்தம் செய்ய தயாராகிவிட்டான்"** என்றும் கூறப்படுகின்ற ஹதீது குத்ஸிகளின் பொருளாகும்.

## தவ்ஹீதின் எதார்த்தம்

அல்லாஹ்வின் வுஜூது மட்டும் தான் உண்மை! அது எப்போதும் அழியாமல் நித்தியமாய் இருக்கும். படைப்புகள் அவனின் பண்புகள், திருநாமங்களின் வெளிப்பாடு!, படைப்பின் உள்ளமை, செயல்கள் யாவும் அல்லாஹ்வின் உள்ளமையைக் கொண்டே நிலைத்திருக்கின்றன. படைப்புகள் வெளியானால் அல்லாஹ்வின் வுஜூது மறைந்துவிடும். அல்லாஹ்வின் வுஜூது வெளியானால் படைப்புகள் மறைந்துவிடும். அதனால், அல்லாஹ்வை புறக்கண்ணால் நபிகள் கோமான் முகம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைத் தவிர்த்து வேறு எவராலும் காண முடியாது. யாராவது படைப்புகளை அறிந்தோ அறியாமலோ **"அல்லாஹ்"** என்று கூறக்கூடாது. அவ்வாறு கூறுபவர் ஷரீஅத்தின் தீர்ப்பின்படி **"சிந்திக்"** ஆவார்.

அல்லாஹ்வின் தாத்தில் பனாவாகி ரூஹூல் குத்ஸோடு வாழ்பவருக்கு படைத்தவனும் படைப்பும் திரையாகாது! இந்நிலையில் இரண்டையும் (தன்ஸீஹ், தஷ்பீஹ்) காட்சி காண்பதை **"மஹ்மு தன்ஸீஹ்"** என்பர். இந்த நிலையில் உள்ள வரை **"அஹ்த் தம்கீன்"** என்று கூறப்படும். இதுதான் பூரணமான தவ்ஹீதாகும் இதனையே **"வஹதத்துல் வுஜூத்"** கோட்பாடு சுட்டிக்காட்டுகின்றது.

இந்நிலையை அடைந்தவர் ஷரீஅத்தின் வரம்பை பேணி அடக்கத்துடன் இருப்பார். அதனால் ஷரீஅத்திற்கு எதிரான எதுவும் இவரில் காண முடியாது.

## வஹ்தத்துல் வுஜூத் என்றால் என்ன ?

அல்லாஹ்வின் **"வுஜூத்"** மட்டும் தான் சுயமானது ! படைப்பின் **"வுஜூத்"** சார்புடையது!

அதாவது தனித்து சுயமாக நிற்க முடியாதது. அல்லாஹ்வை சார்ந்து நிற்பது என்பதை கல்புக்கண்ணால் காட்சி கான்பதைக் குறிக்கும். இதனை சாதாரண மக்களும் அறிவது கடமை! என்றும், "லாஇலாஹ இலல்லாஹ்"! என்ற திருக்கலிமா கூறும் பொருள் இதுவே ! என்றும் சிலர் வாதிக்கின்றனர்.

இந்த வாதத்தை முதன் முதலில் லக்னோவைச் சேர்ந்த அஷ்ஷெய்கு அப்துர்றஹ்மான் லக்னவி என்பவர் 18-ம் நூற்றாண்டில் முன் வைத்தார். இவரின் இக்கருத்தை பல அறிஞர்கள் மறுத்து பல நூற்கள் எழுதியுள்ளனர். அவ்வாறு எழுதியவர்களுள் முக்கியமானவர் அல்லாஹஸரத் ஸெய்யித் பீர் மஹர் அலிஷாஹ் (பாகிஸ்தான்) ஆவார்கள். இவர்கள், "தஹ்கீக் கலிமத்துல் ஹக்" என்ற நூலில் அஷ்ஷெய்கு அப்துல் றஹ்மான் லக்னவி அவர்களின் "கலிமத்துல்ஹக்கின்" நூலில் உள்ள குறைகளை விரிவாக ஆதாரத்துடன் விளக்கியுள்ளார்கள் !

"லாஇலாஹ இல்லல்லாஹ்"! என்ற கலிமாவை விளங்கி யவர்கள் மூன்று விதத்தில் உள்ளனர்.

"வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை" என்றபது ஆரம்ப நிலையிலுள்ளவர்களின் கலிமாவாகும். இக்கலிமாவின் இப்பொருளைத்தான் "ஷரீஅத்" வலியுறுத்துகின்றது. இது ஷிர்க்கை ஒழிக்கவந்த தவ்ஹீதின் அடிப்படையான கலிமாவாகும். இப்பொருளை விளங்கி தவ்ஹீத் செய்வதையே ஷரீஅத் அனைவரையும் வலியுறுத்துகின்றது.

இதனைக் குறித்தே,

"லாஇலாஹ இல்லல்லாஹு என்று கூறும்வரை யுத்தம் செய்ய ஏவப்பட்டுள்ளேன் என்றும்,

"லாஇலாஹ இல்லல்லாஹ்" என்று கூறியவர் சொர்க்கம் நுழைந்தார்" என்றும் நபிகள் திலகம் ஸல்லல்லாஹுஅலைஹி வசல்லம் கூறினார்கள்.

கலிமாவின் இரண்டாவது நிலை ”லா மத்லூப இல்லல்லாஹ்”! என்பதாகும். இக்கலிமா தரீக்கத்தின் கலிமாவாகும்.

“தரீக்கத்” என்பது தக்வாவின் வெளிப்பகுதியைக் கடந்து அதன் பாதின் பகுதியில் கால் பாதிப்[பதிப்பதாகும். அதாவது புலன்களின் கட்டுப்பாட்டிலிருந்து கல்பின் வெளிச்சத்தில் செயல்படுபவராகும். இவரின் அறிவை “ஐனுல் யகீன்” என்பர். இவர் மலக்கூத்தின் காட்சிகளைப் பார்ப்பார். இவருக்கு உலகமும் அதன் மாயத்தோற்றமும் மறைந்து சூக்கும உலகம் வெளிப்பட்டு அதனைக் காட்சி காண்பார். இந்த நிலையில் இருப்பவர், அல்லாஹ் அன்றி வேறு எந்தத் தேட்டமும் இல்லை என்று கூறி அல்லாஹ்வை நோக்கி முன்னேறுவார்.

இந்த நிலையிலிருப்பவர் செயல்கள் பண்புகளின் எதார்த்தங்களை விளங்கி லாஃபாஇல இல்லல்லாஹ்! லாஸமீஅ இல்லல்லாஹ்! வாமுதகல்லிம இல்லல்லாஹ்! ....என்று கூறுவர்.

இந்த நிலையையும் தாண்டி றூஹின் வழிகாட்டுதலிலும் அதன் எதார்த்தமான ஸிர்ரு, கபிய்யி, அக்பா என்ற தலங்களின் நிலைக்கு உச்சம் பெற்றவர் தன்னை முழுமையாக சூனியமாகிய நிலையில் “லாமவ்ஜூத இல்லல்லாஹ்! என்பார். இந்த மூன்றாவது சாயுச்ச நிலையைத்தான் “வஹ்தத்துல் வுஜூத்” என்கின்றனர்.

இந்த நிலையை எய்தியவர்கள் மிகச்சொற்பமானவர்களாகும்.

சூனிய நிலையில் கஷ்பால்காண்பதை சாதாரண பாமரனும் அறிவது கடமை என்றும், அவ்வாறு அறியாதவர் கலிமாவின் கருத்தை அறியாதவர் என்றும் கூறுவது மடமையிலும் மடமையாகும் !.

மனிதனால் முடியாததை ஷரீஅத் ஒருபோதும் கடமையாக்காது? பாமரர்களின் அறிவையும், பாரமார்த்திக ஞானம் பெற்றவர்களின் அறிவையும் சமப்படுத்திப்பார்ப்பவன் அடிமுட்டாள் ஆவான்.

படித்த மேதைகளால் கூட புரிந்துகொள்வதில் தடுமாற்ற மடைகின்ற "வஹ்தத்துல் வுஜூத்"கோட்பாட்டை பாமரர்களின் விவாதப் பொருளாக்கி சிலர் மக்களை வழி கெடுக்கின்றனர். தான் விழுந்த குழியில் மற்றவர்களையும் வீழ்த்த பிரயத்தனம் செய்கின்றனர். இதற்கு அறியாத்தனமாக சிலர் ஏமாந்து பாலியாகியிருப்பது வேதனையானதாகும்.

வஹ்தத்துல் வுஜூதை கஷ்பால் காணாதவர்கள் படைப்பையும் படைத்தவனையும் வேறுபடுத்தியே பார்க்கின்றனர். இதுவே அவர்களின் அனுபவமாகும். அனுபவத்திற்கு மாறாகப் பேசுவது கற்பனைப் பேச்சாகும். இவ்வாறு பேசுபவர் ஷரீஅத்தில் ஸிந்தீக் ஆவார் !

ஞானம் என்பது கஷ்பால் பெறும் அறிவாகும் ஏட்டுப் படிப்போ, செவிவழிச் செய்தியோ ஞானம் ஆகாது. இது விடயத்தில் முஸ்லிம்களும், முஸ்லிம் அல்லாதவர்களும் சமம் ஆகும். சிலர் வாய்ச்சொல் பேச்சை ஞானமாகக் கூறி மக்களை ஏமாற்று கின்றனர். இவர்கள் ஷரீஅத்தில் துணிச்சலாக விளையாடும் அபாக்கியசாலிகளாகும். இவர்களின் வெளிவேஷங்களைக் கண்டு ஏமாந்தவன் மறுமையில் தவிக்க வேண்டி வரும்! எச்சரிக்கை!

## தஸவ்வுப் பாதையின் வெற்றி

01. ஈமான், 02. தக்வா, 03. வழிகாட்டி, 04. மனப்போராட்டம், என்ற நான்கு அடிப்படையில் அமைந்துள்ளது.

இதனை பின்வரும் திருவசனம் மூலம் அறியலாம்.

**"மூஃமின்களே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள், அவன்பால் நெருங்குவதற்குரிய வஸீலாவை (வழிகாட்டியை) எடுத்துக்கொள்ளுங்கள், அவன் வழியில் ஜிஹாது செய்யுங்கள், உங்களுக்கு வெற்றி கிடைக்கும்". (05/35)**

வெற்றி என்று இத்திருவசனத்தில் கூறப்படுவது அல்லாஹ்வை அறிந்து ரூஹுல் குத்ஸை பெறுவதாகும்.

இதனை ஒருவர் தன்னை அழித்து தனது வுஜூத் அல்லாஹ்வுக்கு வேறல்ல என்பதை ஹக்குல் யகீனாக காண்பதனால் ஏற்படும். இவர் வஹதத் என்ற நிலையையும் தாண்டி அஹதிய்யத்தில் அடக்கமாகி ஒடுங்குவதன் மூலமே ரூஹுல் குத்ஸிய்யைப் பெற்று பூரணமானவராக மக்களிடம் வழிகாட்ட வருவார்.

இதனை, அட்டாளைச்சேனை அல் ஆரிபுபில்லாஹ் அஹ்மத் மீரான் சூபி அவர்கள் விளக்கிக் கூறுகிறார்கள்,

**ஆரிபீன்களின் கணத்தில் அனைந்து சேர்வோமா**
**நாம் வேறதென்ற அக்கினியில் வெந்து வீழ்வோமா**
**கண்டிடுவோம் கல்புதனில் கறளகற்றியே**
**சென்றிடுவோம் சச்சிதானந்த வெற்றியே**
**காப கவ்சைனி தன்னிற் கண்டு சொக்கியே**
**காதலுடன் காட்சி லிகா காணும் முற்றியே**

**கண்ட பொருளத்தனையும் நின்ற நிராமய மதாய்**
**நினைவு நிறுத்தியே நோக்கி**
**வட்ட வடிவமான சுழி முனை என்ற மத்தியில்**
**மகிழ்வுட னிஸ்மை தாக்கி**
**தன்னிலையை தானறிந்து தவத்தினில் சேரு**
**நாம் முன்னிருந்து முச்சுடரில் முங்க்கினோம் பாரு!**

**கோலங் குறிப்பென்பதெல்லாம் குதாவின் ளுஹூரு**
**குவலயத்தில் வேறுகண்டால் கூடுமோ தவ்ஹீது**
**பஞ்சென்றும் நூலென்றும் பல உடைகளென்றும்**
**நீ பார்த்திருக்காய்**
**அஞ்சாமல் அழ்ந்ததில் பஞ்சை அன்றி அமைந்திருக்கா**

**உன்னிலே உதித்தெழுந்த ஸிபத்தினைப்பாரு!**
**உறங்கினால் ஒழிந்த இடம் உண்மையில் தேடு!**
**விழித்த போது எங்கிருந்து மீளுது கூறு!**
**விபரமறிந்தால் மவுத்தை அறியலாம் நேரு!**
**சூரியனது உதித்தால் துலங்கும் பிரகாசமது**

**மேகமதுவே மறைத்தால் சூரியனுமில்லையாமோ!**
**இபுறாஹீம் நபியவர்கள் மகனை அறுத்ததுவே**
**இரகசிய மதுவே அன்னியத்தை அறுத்ததுவே**
**மூஸா நபி நேசமுடன் மரந்தனிற் பார்த்ததுவே**
**சூட்சமது தன்னபுசில் காட்சியளித்ததுவே**

**நானென்றும், நீயென்றும், நடுவென்றும் கண்டு நாடுவதை**
**ஆடுவதும் அசைவதும் அனைத்துமே**
**அவனென்றறிந்துகொண்டு மாங்காகியினுள்**
**வண்டதுபோல் மஹ்பூபிலடங்கு!**
**மர்தபக்துல் அஹதிய்யாவில் மௌனமுடனொடுங்கு**
**நானென்ற நினைவு தன்னை கோனென்றதில டக்கு**
**ஹூவென்ற ஹூவிய்யத்தில் குல்லுன் "நபி"(யீ) யாக்கு (30)**

இறைவனின் பேரழகில் சொக்கி அவனை தனது காதலியாக அன்புக்குரியவளாக எடுத்துக்கொள்ளும் காதலனுக்கு இறைவன் விதிக்கின்ற நிபந்தனையை காயல்பட்டிணம் தந்த காமில் வலி அஷ்ஷைஷய்குல்காமில் ஷைஷய்கு அப்துல் காதிர் சூபி குத்திஸ்ஸிர்ருஹூ அழகு தமிழில் பின் வருமாறு கூறுகின்றார்கள்.

**என்னழகில் மயங்கி மண**
**முடிக்க வந்த நேசரே**
**எனக்கு மஹர் மிகுதமாகும்**
**மொழியக் கேளும் நேசரே**
**நொந்த மனமும் நோய்ந்து**
**மெலிந்து தேய்ந்து போன திரேகமும்**
**நொடிப்பொழுதும் தூக்கமறியா**
**தூய்மையான கண்களும்**
**என்னையன்றி வேறே வர்க்கும்**
**இடம் கொடாதென் ஆசையால்**
**ஏங்கி ஏங்கி துடி துடிக்கும்**
**துக்கமான உள்ளமும்**
**இவை யாவும் ரொக்கமாக**

**கொடுக்க வேண்டும் விரும்பினால்**
**இதற்குத் தவணை இல்லை இல்லை**
**சொல்ல வேண்டாம் நேசரே!**
**சாவில்லா சுக வாழ்வை**
**நாடில் செத்துப் போகவேண்டுமே!**
**சேர்த்து வைக்கும் சாலச்**
**சிறந்த வழி இதுவே நேசரே!**
**நடையன் இரண்டும் கழட்டி விட்டு**
**நடந்து வாரும் இவ்விடம்**
**நமது சுத்த திருவடியாம்**
**சன்னிதானம் நேசரே**
**இரு உலகம் வேறனெனும்**
**கைரிய்யத் தும் ஒரு நடை யெனும்**
**உன்னை உனரும் "அன்னியத்" தும்**
**மற்ற நடையின் நேசரே!**
**யாரைக்காதல் வைத்தீர் என்று**
**உம்மை கேட்கில் செப்புவீர்**
**யானே காதலன் என்னையே**
**யான் காதலித்தேன் நேசரே. (31)**

## தஸவ்வுப்பின் சிறப்பு

ஷரீஅத்தின் கடைமைகளை ஒழுக்கத்துடன் ஒழுகி தனது அகபுற இரண்டையும் பரிசுத்தமாக்கி தன்னையழித்து அல்லாஹ்வில் ஒடுங்கும் ரசவாதத்தை தஸவ்வுபையன்றி வேறு எந்த துறையிலும் காண முடியாது.

அதனால் தான் ஹுஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி பின்வருமாறு கூறுகின்றார்கள்.

ஏனைய அனைத்து துறைகளையும் விட சூபிகளின் வழிதான் சிறப்பானது. அவர்கள் பின்பற்றும் வழி மிகச்சரியானது. அவர்களின் ஒழுக்கம் அப்பழுக்கற்றது!

வஹியால் வெளிப்படுத்தப்பட்ட சத்திய ஞானத்தில் நன்கு திளைத்த நிபுணத்துவம் முழுவதும், அறிஞர்களின் அறிவு முழுவதும், கற்றவர்களின் கல்வி முழுவதும் ஒழுங்கு திரட்டி சூபிகளின் வாழ்வை விட ஒழுக்கத்தை விட, சிறந்த ஒன்றை உண்டாக்க முயன்றாலும் அது ஒருபோதும் சாத்தியமாகாது.(32)

ஷைய்குல் அக்பர் முஹ்யத்தீன் இப்னு அரபி றழியல்லாஹுத்தஆலா அன்ஹு கூறுகின்றார்கள்,

சூபிகளின் ஆதாரங்களை நிராகரிக்கின்ற எந்த ஓர் ஆதாரமும் எமக்கு கிடைக்கவில்லை. ஷரீஅத்துக்கு எதிரான எதுவும் அதில் இல்லை. முட்டாள்கள் மட்டும்தான் இவர்களை குறை கூறுகின்றனர். (33)

## எண் விளக்கம்

1) முகத்தமாத். இப்னுகல்தூம் - பக்கம் - 467.

2) தஃரிபாத், இமாம் ஜுர்ஜானி - பக்கம் - 23 .

3) இஃதிகாத் பிறக்கில் முஸ்லிமீன் வல்முஷ்றிகீன். இமாம் பகுறுத்தீன் றாஸி பக்க ம் 72-73.

4) முரீதுந்நிஅம். இமாம் தாஜுதீன் ஸுப்கி - பக்கம் - 119 .

5) திருக்குர்ஆன் 62:02 .

6) திருக்குர்ஆன் 3:164 .

7) திருக்குர்ஆன் 9:103 .

8) இஸ்லாம்கி ஃசார் உஸூலி இஸ்திலாஹீன் (உருது). அல்லமா முப்தி அஹ்மத் யார்கான்.

9) றிஸாலத்துல் குறைஷி. அபுல் காஸிம் அப்துல் கரீம் இப்னு ஹவாஸின். பக்கம் -12 .

10) பதாவா ஹதீதிய்யா, அல்லாமா இமாம் இப்னு ஹஜர் மக்கி பக்கம் - 150, 151 .

11) அல் மவ்ஸூஆத்துஸ் ஸபிய்யா. பக்கம் - 61

12) அல்குர்ஆ ன் 18:28

13) தப்ஸீர் பங்வி. பாகம் - 5 பக்கம் - 166

14) அல் மக்ஸதுல் அஸ்னா . இமாம் ங்ஸ்ஸாலி பக்கம் - 115

15) பிதாயத்துல் ஹிதாயா, (மறாக்கிபுல் உபூதிய்யா) இமாம் ங்ஸ்ஸாலி பக்கம் - 04

16) ஷரஹு களீதத்து ஹாலிஸ்ஸூலூக்கி. அல்லாமா இப்னு அலான் சித்தீகி, பக்கம்-60

17) மஸ்தான் சாஹிபு பாடல் ஆநந்தப்பத்து 01

18) மஸ்தான் சாஹிபு பாடல் ஆநந்தப்பத்து 01

19) மஹ்பூப் மனோன் மணிக்கீதம் அஹ்மத் மீரான் சூபி கீதம் -10

20) மஹ்பூப் மனோன் மணிக்கீதம் அஹ்மத் மீரான் சூபி கீதம் - 06

21) மஹ்பூப் மனோன் மணிக்கீதம் அஹ்மத் மீரான் சூபி கீதம் - 21

22) மஹ்பூப் மனோன் மணிக்கீதம் அஹ்மத் மீரான் சூபி கீதம் -17

23) ஷறஹு களீதத்து ஹாலிஸ்ஸூலூக்கி அல்லாமா இப்னு அலான் சித்தீகி - பக்கம் - 74

24) ஷரஹு களீதத்து ஹாலிஸ்ஸூலூக்கி அல்லாமா இப்னு அலான் சித்தீகி - பக்கம் -72

25) அன்வாறுல் குத்ஸிய்யா பீ மனாகிபிஸ்ஸாதாத்தி நக்ஷபந்தியா. முகம்மது றகாவி - பக்கம் - 157

26) ஷரஹு களீதத்து ஹாலிஸ்ஸூலூக்கி. அல்லாமா இப்னு அலான் சித்தீகி. பக்க ம் 79 - 80

27) மஹ்பூப் மனோன்மணி கீதம். அஹ்மத் மீரான் ஸூபி கீதம் - 13

28) ஸியறுஸ் ஸூலூக். - ஹகீகா- சுல்தானுல் வாயிழீன் முஹம்மது அப்துல் காதிஸ்ஸூபி - ஹைதராபாத்

29) அல் குர்ஆ ன் - 05:35

30) மஹ்பூப் மனோன்மணி கீதம். அஹ்மத் மீரான் ஸூபி கீதம் - 18

31) அர்றாத்திபத்துல் அலிய்யத்துஸ் ஸூபிய்யா. ஷெய்கு அப்துல் காதிர் ஸூபி. பக்கம் - 60-61

32) அல் முன்கிதும் மினல்ழலால், இமாம் ஙஸ்ஸாலி பக்கம் - 28

33) லதாயிபுல் மினன். இமாம் அப்துல் வஹாப் ஷஃறானி. பக்கம் - 26

**----------- பூர்த்தி. -----------**



